# யாப்பருங்கலக் காரிகை

## புத்துரை

குணசாகரர் உரைவிளக்கங்களில்
இன்றியமையாத பகுதிகளுடன்



புத்துரை ஆசிரியர்:
புலவர் ம. வே. பசுபதி
தமிழ் விரிவுரையாளர்,
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.
தஞ்சை மாவட்டம்

வெளியீடு:
அன்னபூர்ணா பதிப்பகம்
திருப்பனந்தாள் ○ தஞ்சை மாவட்டம்

# யாப்பருங்கலக்காரிகையும் புத்துரையும்

கந்தம் மடிவில் கடிமர்ப்
பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி
ஏத்தி எழுத்(து),அசை,சீர்
பந்தம், அடி,தொடை, பா,இனம்
கூறுவன். பல்லவத்தின்
சந்தம் மடிய அடியான்
மருடிய தாழ்குழலே! (க)

பொழிப்புரை: தன்னுடைய அடிகளால், தளிரின் நிறத்தினைத் தோற்கச் செய்த, தாழ்ந்த குழலினை உடைய பெண்ணே! மணம் குறையா நறுமலர் அசோகமரத்தின் அடியில் இருக்கும் எம்முடைய அருகதேவனின் இரண்டு திருவடிகளையும் வாழ்த்தி எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, பாவினம் ஆகியவற்றின் இலக்கணங்களை இந்நூலுள் எடுத்துச் சொல்வேன்.

யாப்பு, பாட்டு, தூக்கு, தொடர்பு, செய்யுள் என்பன ஒரு பொருட் சொற்கள். யாத்தலின் யாப்பு. பாடுதலின் பாட்டு. ஓசை நயம் பொருத்தப்படுதலின் தூக்கு.* தொடர்புறப் பெறுதலின் தொடர்பு. செய்யப்படுதலின் செய்யுள்.

எழுதப்படுவது எழுத்து, எழுத்துக்களை அசைத்து ஓசை காணுவது அசை. அசைகளைச் சீராக நிறுத்துவது சீர். இரண்டு சீர்களைப் பிணைப்பது தளை. அத்தளைகள் அடுத்து நடப்பது அடி. ஓரடி தம்முள்ளேயும் பிற அடிகளோடும் தொடுத்துக்கொள்வது தொடை. தொடையுடன் பரவி நடப்பது பா. பாவுக்கு இனமாய் வருவது பாவினம்.

இந்நூல் காரிகையாப்பிற்றாய், அவையடக்கம், உதாரணங்கள், முதல் நினைப்பு, இலக்கியம், ஆகியவை உடையதாய்ச் செய்யப்பட்டது; அலங்காரம் பொருந்தச் செய்யப்

* தூக்கு — ஓசை.

பட்டது. யாப்பருங்கலம் என்னும் யாப்பிற்கு அங்கமாகச் செய்யப்பட்டது எனக் குணசாகரர் விளக்குவர்

இந்நூற்பெயரை யாப்பு + அருமை + கலம் + காரிகை —எனப்பிரிக்கலாம். யாப்பாகிய அரிய கடலைக் கடத்தற்குக் கலம் போன்று உதவும்–காரிகை யாப்பில் அமைந்த இலக்கணம் என்பது அப்பிரிப்பினால் தோன்றும் பொருள். யாப்பு+அருங்கலம் எனவும் பிரிக்கலாம். இப்பிரிப்புக்கு அருங்கலத்தார் என்ற பிரிவைச்சேர்ந்த சமணராகிய அமித சாகரரால், காரிகை யாப்பில் செய்யப்பட்டது என்பது பொருள். இதுமிகச்சிறந்த கருத்து.

## குணசாகரர் விளக்கவுரையிற் சில பகுதிகள்

இந்நூல் யாதுகாரணமாகச் செய்யப்பட்டதோ எனின் பண்டையோர் உரைத்த தண்டமிழ் யாப்பில் கொண்டிலாத குறியினோரைக் குறிக்கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப்பனுவல் துணிபொருள் உணர்ந்த நல் அவையோரை நகுவிப்பது காரணமாகவும் செய்யப்பட்டது.

இந்நூல் யாவரால் செய்யப்பட்டதோ எனின் ஆரியமென்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப் படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமித சாகரர் என்னும் ஆசிரியரால் செய்யப்பட்டது.

இந்நூல் எவ்வளவைத்தோ எனின், இயல்வகையால் மூன்றும், காரிகை வகையால் நாற்பத்துநான்கும், கிரந்த வகையால் தொண்ணூறு கிரந்தமும் இருபத்தெட்டெழுத்தும் எனக்கொள்க*

அவற்றுள் ஒரு கிரந்தமாவது ஒற்றொழித்து உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பதிரண்டெழுத்தாமெனக்கொள்க. அவற்றுள் நேரசை முதலாகிய காரிகை இருபத்தொன்றும் நிரையசை முதலாகிய காரிகை இருபத்து மூன்றுமெனக்கொள்க.

---

* இவ்வெண்ணிக்கை, குணசாகரர் எழுதிய இயல் செய்யுட்களின் முதல் நினைப்புக்காரிகை மூன்றையும் பதினொரு உதாரண முதனினைப்புக் காரிகைகளையும் நீக்கி எண்ணிப்பார்த்தால் சரியாக வரும்.

## அவையடக்கம் 1.

தேனார் கமழ்தொங்கல் மீனவன்
கேட்பத்தெண் ணீரருவிக்

கானார் மலையத்(து) அருந்தவன்
சொன்னகன் னித்தமிழ்நூல்

யானா நடாத்துகின் றேன்(ன்)என்(று)
எனக்கே நகைதருமால்

ஆனா அறிவின் அவர்கட்கென்
னாங்கொல்என் ஆதரவே (உ)

பொழிப்புரை : தேன் நிறைந்து, மணம் வீசும்(வேப்ப மலர்)மாலையை அணிந்த பாண்டியன் கேட்கும்படியாகத், தெளிந்த அருவிதரும் நீரைக்கொள்ளும் காடுகள் மிகுந்த பொதியமலை முனிவனாகிய மிக்க தவஞ்செய்த அகத்தியன் நவின்ற அழகிய இளைய யாப்பிலக்கணத்தை, நானுமா எழுதுகின்றேன் என்று நினைக்கும்போது எனக்கே சிரிப்பு உண்டாகிறது. மிக்க பெரிய அறிவினைக் கொண்டவர்கட்கு என்செயல் எவ்வளவு சிரிப்பைக் கொடுக்குமோ?

அகத்தியன் முத்தமிழ்க்கும் இலக்கணம் செய்தான். அவற்றில் இயல்தமிழ் இலக்கணத்தின் ஒரு பகுதி யாப்பிலக்கணம். அதற்கு இந்நூல் ஈடாகாது என்பதுபோலவும், 'அறிவான் மிக்கவர்க்கு மிக்கநகை தரும்' என்பது போலவும் ஆசிரியர் கூறி இருத்தலின் இஃது அவைக்கு அடங்கிய அவையடக்கம் ஆகிறது.

## அவையடக்கம் 2

சுருக்கமில் கேள்வித் துகள்தீர்
புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொ
ளாம்;பனி மால்இமயப்
பொருப்பகம் சேர்ந்தபொல் லாக்கருங்
கக்கையும் பொன்னிறமாய்
இருக்கு(ம்)என்(று) இவ்வா(று) உரைக்குமன்
றே,இவ் விருநிலமே (௩)

பொழிப்புரை: பனிபடர்ந்த பெரிய இமயமலையைச் சேர்ந்த இழிந்த காகமும் பொன்நிறமாய்க் காட்சிதரும் என்று இப்பெரிய உலகம் கூறும் அன்றே? அதுபோலவே குறைவற்ற அறிவுகொண்ட குற்றந்தீர்ந்த புலவர் முன்னே நான் சொல்லும் சிறப்பிலாத் தொகுதிப் பொருளும் சிறப்பான பொருளாகும்.

இமயத்தைப் பொன்மலை என்பதும், அப்பொன்மலையிற் காகம் சேரின் பொன்னொளியில் ஆழ்ந்து தன் நிறம் தோன்றா தொழியும் என்பதும் ஒரு மரபு. தன் கருத்துக்கள் விழுப்பொருளாகும் என ஆசிரியர் கூறினமையால் இஃது அவையை அடக்கிய அவையடக்கமாகிறது. எனினும் யான்மொழிந்த பருப்பொருள் என்று கூறினமையாலும் தன்கருத்துக்களுக்குக் காகத்தை ஒப்புமை காட்டியமையாலும் ஆசிரியர் தம் தன்னடக்கத்தைக் காட்டுகிறார்.

# 1. உறுப்பியல்

பாடல் இயற்றப்பயன்படும், எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற ஆறு உறுப்புக்களையும் விளக்கும் இயல் ஆனதினால் இஃது உறுப்பியல் எனப்படும்.

## 1. எழுத்து

குறில்,நெடில், ஆவி, குறுகிய
முவுயிர், ஆய்த(ம்)மெய்யே,
மறுவறு முவினம், மைதீர்
உயிர்மெய் மதிமருட்டும்
சிறுநுதல் பேரமர்க் கண்செய்ய
வா(ய்)ஐய நுண்ணிடையாய்!
அறிஞர் உரைத்த அளபும்
அசைக்(கு)உறுப்(பு) ஆவனவே (௬)

பொழிப்புரை : அறிவை மயக்கும் சிறிய நெற்றியினையும், பெரிய போர்செய்யும் கண்களையும், சிவந்த வாயையும், உண்டோ இல்லையோ என்று ஐயப்படுமாறு உள்ள நுண்ணிய இடையினையும் கொண்ட பெண்ணே! குறிலும், நெடிலும், உயிரும், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம் ஆகியவையும், ஆய்தமும், மெய்யும், குற்றம் தீர்ந்த வல்லின, மெல்லின, இடையினமும், குற்றம் தீர்ந்த உயிர்மெய்யும் அறிஞர்கள் சிறப்பித்துச் சொல்லும் உயிரளபெடை, ஒற்றளபெடைகளும் ஆகியவை அசை பிரிக்க உறுப்புக்கள் ஆம்.

இக்காரிகையிற் கூறியவற்றை எழுத்திலக்கண நூலார் முதல், சார்பு என்னும் இருபிரிவினுள் அடக்குவர்.

குறில் நெடில் என்பனவே அசைபிரித்தற்கண்யாண்டும் நிற்றலான் தலைமைபற்றி முதலில் வைக்கப்பட்டன.

அசை பிரிக்குங்கால் குற்றியலுகரம், குற்றியலிகரம் என்பன குற்றெழுத்தாகவும், உயிரளபெடை,தனித்தனியே நெட்டெழுத்தும் குற்றெழுத்துமாகவும் எண்ணப்படும். அவ்

வாறெண்ணுதலால் சீரும் தளையும் சிதையுமானுல், குற்றிய லுகரம், குற்றியலிகரம், உயிரளபெடையில் அளபெடுத்து வரும் ஒத்தகுற்றெழுத்து என்பன மெய்யெழுத்தாக எண்ணப்படும்; ஒற்றளபெடையும் ஓர் அசையாக எண்ணப் படும். ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தாக எண்ணப்படும். ஆய்தம் அசைபிரிக்குங்கால் ஒற்றெழுத்தாகவே கருதப் பெறும்; குறிலுயிராகவும் கருதலுண்டு; இஃது அருகிய வழக்கு.

## குணசாகரர் விளக்கவுரையிற் சில பகுதிகள்

அஃகேனம் எனினும், ஆய்தம் எனினும், தனிநிலை எனினும், புள்ளி எனினும், ஒற்றெனினும் ஒக்கும்.

மெய்யெனினும், உடம்பெனினும், உறுப்பெனினும் ஒற்றெனினும், புள்ளியெனினும் ஒக்கும்*

மறுவறு மூவினம் என்று சிறப்பித்தவதனுல் அவை உயிர்மெய்யாகிய காலத்தும் அப்பெயரானே வழங்கப்படும் எனக்கொள்க.

மைதீர் உயிர்மெய் என்று சிறப்பித்தவதனுல் ஏறிய உயிரினளவே உயிர்மெய்க்கும் அளவெனக் கொள்க†

அளபெனினும், அளபெடை எனினும், புலுதமெனினும் ஒக்கும்.

'அறிஞருரைத்த அளபும்' என்று சிறப்பித்தவதனுல் குற்றெழுத்தும் ஒற்றளபெடையும் ஒரோ ஒன்று** ஒரு மாத்திரை; நெட்டெழுத்து இரண்டு மாத்திரை; உயிரள பெடை மூன்று மாத்திரை; ஆய்தமும், மெய்யும், குற்றிய லிகரமும், குற்றிய லுகரமும் ஒரோ ஒன்று அரை மாத்திரை ஐகாரக்குறுக்கம் ஒன்றரை மாத்திரை; மகரக்குறுக்க மும் ஆய்தக்குறுக்கமும் ஒரோ ஒன்று கால் மாத்திரை.

---

*ஒற்று,புள்ளி என்னும் இரு பெயர்களும் ஆய்தத்திற் கும் மெய்க்கும் பொதுப்பெயர்களாம்

†குறில் உயிர்மெய்யாயின் ஒரு மாத்திரை; நெடில் உயிர் மெய்யாயின் இரண்டு மாத்திரைகள்

** ஒரோ ஒன்று = ஒவ்வொன்றும்

## 2. அசை

குறிலே நெடிலே குறிலிணை
ஏனைக் குறில்நெடிலே
நெறியே வரினும் நிறைந்(து)ஒற்(று)
அடுப்பினும் நேர்நிரைஎன்(று)
அறி! வேய் புரையு(ம்)மென் தோளி
உதாரணம் ஆழிவெள்வேல்
வெறியே சுருநிறம் விண்தோய்
விளாம்என்று வேண்டுவரே! (ரு)

பொழிப்புரை: மூங்கில் ஒத்த அமைப்பையும், மென்மையையும் உடைய தோள்களைக்கொண்ட பெண்ணே! குறில், நெடில், குறிலிணை, குறில்நெடில் என்பவை தனித்துவருதலும் மெய்யெழுத்தை உடன் பெற்று வருதலும் செய்யின் முறையே முதல் நான்கை நேரசை என்றும், பின்நான்கை நிரையசை என்றும் வழங்குவர். அவற்றிற்கு உதாரணம், ழி, ஆ, வெள், வேல், (நேர் 4) வெறி, சுரு, நிறம் விளாம் (நிரை 4) என்பன.

ஆ — நெடில் தனித்து வந்த நேரசை

ழி — குறில் தனித்து வந்த நேரசை

வெள் — குறில் மெய்யெழுத்தை உடன் பெற்று வந்த நேரசை

வேல் — நெடில் மெய்யெழுத்தை உடன் பெற்றுவந்த நேரசை

வெறி — இரண்டு குற்றெழுத்துக்கள் சேர்ந்த நிரையசை

சுரு — ஒரு குற்றெழுத்தும், ஒரு நெட்டெழுத்தும் சேர்ந்த நிரையசை

நிறம் — இரண்டு குற்றெழுத்துக்கள் ஒருமெய்யெழுத்துடன் சேர்ந்த நிரையசை

விளாம் — ஒரு குற்றெழுத்தும், ஒரு நெட்டெழுத்தும் ஒரு மெய்யெழுத்துடன் சேர்ந்த நிரையசை

அசை பிரித்தபிறகும் பொருள் பயப்பின் அதனைச் சிறப்பசை என்றும் பொருள் பயவாதொழியின் அதனைச் சிறப்பிலசை என்றும் கூறுதல் ஒரு வழக்கு. 'வெள்வேல்' என்பது ஓரசையாயின் வெள் என்றும் வேல் என்றும் பிரிக்குங்கால் இரண்டு அசைகளும் பொருள் பயக்கின்றன. இவை சிறப்பசை. யாப்பு என்பது ஓரசையாயின் 'யாப்' என்றும் 'பு' என்றும் பிரிக்குங்கால் இரண்டு அசைகளும் பொருள் பயவாமையின் இவை சிறப்பிலசைகள்.

நேர் — தனிமை ; நிரை — முறை.

மொழிக்கு முதலிலே நிற்கும் குற்றெழுத்து விட்டிசைத்து வரும் இடத்தில்தான் தனித்து நேரசையாகும். 'அஅவனும்' என்பதிலுள்ள மொழிமுதற் குற்றெழுத்துத் தனித்து நேரசையாயது.

## குணசாகரர் விளக்க உரையில் சில பகுதிகள்

குற்றெழுத்துத் தனியே வரினும், நெட்டெழுத்துத் தனியே வரினும், குற்றெழுத்து ஒற்றடுத்து வரினும், நெட்டெழுத்து ஒற்றடுத்து வரினும் நேரசையாம். குறில் இணைந்து வரினும், குறில் நெடில் இணைத்து வரினும், குறில் இணைந்து ஒற்றடுத்து வரினும், குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வரினும் நிரையசையாம்.

விண்தோய்விளாம் - என்று சிறப்பித்தவதனுல் நேரசை ஓரலகு பெறும், நிரையசை ஈரலகுபெறும் எனக்கொள்க*

---

*அசைக்கு இன்றியமையாத உயிர், உயிர்மெய் ஆகியவற்றில் நேரசையாயின் ஒன்றுபெறும்; நிரையசையாயின் அவற்றில் இரண்டு பெறும். இதனையே நேரசை ஓரலகு பெறும், நிரையசை ஈரலகுபெறும் என்ற தொடர் சுட்டுகிறது. அலகு-அளவு.

போ து சாந் தம் பொற் ப ஏந் தி
ஆ தி நா தற் சேர் வார்
சோ தி வா னந் துன் னு வா ரே
இது நேரிசை நான்கும் வந்த செய்யுள்.

அணி நிழ லாசோ கமர்ந் தரு ணெறி நடா த்திய
மணி திகழ் அவி ரொளி வர தனைப்
பணி பவர் பவ நனி பரி சறுப் பவரே.
இது நிரையசை நான்கும் வந்த செய்யுள்.

## 3. சீர்

ஈரசை நாற்சீர் அகவற்(கு)
உரிய,வெண் பாவினவாம்
நேரசை யால்இற்ற மூவசைச்
சீர்;நிரை யால்இறுப,
வாரசை மென்முலை மாதே!
வகுத்தவஞ் சிக்குரிச்சீர்;
ஓரசை யேநின்றும் சீராம்;
பொதுஒரு நாலசையே. (சு)

தேமா புளிமா கருவிளம்
கூவிளம் சீர்அகவற்(கு)
ஆம்;ஆம் கடைகாய் அடையின்வெண்
பாவிற்(கு);அந் தம்கனியா,
வாமாண் கலைஅல்குல் மாதே!
வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண்(பு) உரைத்த அசைச்சீர்க்(கு)
உதாரணம் நாள்மலரே. (எ)

பொழிப்புரை 6 – 7: கச்சு அசையும் மார்பகத்தையும், சிறந்த ஆடையணிந்த அல்குலினையும் உடைய பெண்ணே! இரண்டு அசைகளினால் ஆகியசீர் ஆசிரிய உரிச்சீர்; அவை நான்கு. அவற்றிற்கு வாய்பாடு தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பன. நேரசையினால் முடியும் மூன்று அசை

களைக் கொண்டவை வெண்பா உரிச்சீர்; அவை நான்கு. அவற்றிற்கு வாய்பாடு தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங் காய், கூவிளங்காய் என்பன. நிரையசையினுல் முடியும் மூன்று அசைகளைக் கொண்டவை வஞ்சியுரிச்சீர்; அவை நான்கு. அவற்றிற்கு வாய்பாடு தேமாங்கனி, புளிமாங்கனி கருவிளங்கனி, கூவிளங்கனி என்பன. ஒரு அசையே சீரா தலும் உண்டு; அஃது அசைச்சீர் எனப்படும். அவை இரண்டு. அவற்றிற்கு உதாரணம் நாள், மலர் என்பன. நான்கு அசைகளால் வரும் சீர் பொதுச்சீர்; அவை பதினுறு. (அவற்றின் வாய்பாடுகள் அடுத்த காரிகையிற் காண்க.)

நாள், மலர் என்னும் வாய்பாடுகள் கொண்ட நேர் நிரைகள் சீராய்வரின் ஓரசைச்சீர்கள் என்றும், மாச்சீர்களை யும் விளச்சீர்களையும் ஈரசைச்சீர்கள் என்றும்; காய், கனி என்று முடிபவற்றை மூவசைச்சீர்கள் என்றும், பொதுச்சீர் களை நாலசைச்சீர்கள் என்றும் வழங்குவர்.

சீர் - தாளம். தாள ஓசைக்கு ஒப்பப் பிரிக்கப்படுதலின் இவை சீரெனப்படும்.

அகவலுரிச்சீர் எனினும் ஆசிரிய உரிச்சீர் எனினும், இயற்சீர் எனினும் ஒக்கும்.

| | | |
|---|---|---|
| நேர் — நாள் | | அசைச்சீர் |
| நிரை — மலர் | | |
| நேர் நேர் — தேமா | | அகவலுரிச்சீர் |
| நிரை நேர் — புளிமா | | |
| நிரை நிரை — கருவிளம் | | |
| நேர் நிரை — கூவிளம் | | |
| நேர் நேர் நேர் — தேமாங்காய் | | வெண்பா உரிச்சீர் |
| நிரை நேர் நேர் — புளிமாங்காய் | | |
| நிரை நிரை நேர் — கருவிளங்காய் | | |
| நேர் நிரை நேர் — கூவிளங்காய் | | |
| நேர் நேர் நிரை — தேமாங்கனி | | வஞ்சியுரிச்சீர் |
| நிரை நேர் நிரை — புளிமாங்கனி | | |
| நிரை நிரை நிரை — கருவிளங்கனி | | |
| நேர் நிரை நிரை — கூவிளங்கனி | | |

## பொதுச்சீரும், அசைச்சீரும் பொதுச்சீரும் செய்யுளகத்து வருங்கால் தளைவழங்கும் முறையும்.

தண்ணிழல் தண்பூ நறும்பூ
நறுநிழல் தந்(து)உறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச் சீர்வந்(து)
அருகும்; இனிஅவற்றுள்
கண்ணிய பூஇனம் காய்ச்சீர்
அனைய; கனியோ(டு)ஒக்கும்
ஒண்நிழற் சீர்;அசைச் சீர்இயற்
சீர்ஒக்கும் ஒண்தளைக்கே. (அ)

பொழிப்புரை: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் நான்கனோடும், தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் என்னும் வாய்பாடுகள் கொண்ட ஈரசைகளைக் கூட்டிப் பெருக்கப் பதினாறு நாலசைச்சீர்கள் (பொதுச்சீர்கள்) கிட்டும். தளைகள் பார்க்குமிடத்துப் பூ (நேர்) என முடியும் எட்டுப் பொதுச்சீர்களையும் காய்ச்சீர் போலவும், நிழல் (நிரை) என முடியும் எட்டுப் பொதுச்சீர்களையும் கனிச்சீர் போலவும், அசைச்சீர்கள் இரண்டனையும் ஆசிரிய உரிச்சீர் போலவும் கருதவேண்டும்.

நேர் நேர் நேர் நிரை — தேமாந்தண்நிழல்
நிரை நேர் நேர் நிரை — புளிமாந்தண்நிழல்
நிரை நிரை நேர் நிரை — கருவிளந்தண்ணிழல்
நேர் நிரை நேர் நிரை — கூவிளந்தண்ணிழல்
நேர் நேர் நிரை நிரை — தேமாநறுநிழல்
நிரை நேர் நிரை நிரை — புளிமாநறுநிழல்
நிரை நிரை நிரை நிரை — கருவிளநறுநிழல்
நேர் நிரை நிரை நிரை — கூவிளநறுநிழல்
நேர் நேர் நேர் நேர் — தேமாந்தண்பூ
நிரை நேர் நேர் நேர் — புளிமாந்தண்பூ

நிரை நிரை நேர் நேர் — கருவிளந்தண்பூ
நேர் நிரை நேர் நேர் — கூவிளந்தண்பூ
நேர் நேர் நிரை நேர் — தேமாநறும்பூ
நிரை நேர் நிரை நேர் — புளிமாநறும்பூ
நிரை நிரை நிரை நேர் — கருவிளநறும்பூ
நேர் நிரை நிரை நேர் — கூவிளநறும்பூ.

எந்த ஒரு பாடலுக்கும் உரிமை பூணுமையின் இவை பொதுச்சீர் எனப்பெற்றன.

தளைவழங்கும் முறைமைபற்றிய தெளிவுரை அடுத்த காரிகை உரையில் காண்க.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'கண்ணிய பூவினம்' என்று சிறப்பித்தவதனுல் வெண்பாவினுள் நாலசைச்சீர் வாரா; ஆசிரியத்துள்ளும் குற்றுகரம் வந்துழியன்றி வாரா; கலியினுள்ளும் பெரும்பான்மையும் குற்றுகரம் வந்துழியன்றி வாரா; வஞ்சியுள் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும்; வஞ்சியுள் இரண்டு நாலசைச்சீர் ஓரடியுள் அருகிக் கண்ணுற்று* நிற்கவும் பெறும்; அல்லனவற்றுள் பெரும்பான்மையும் ஓரடியுள் ஒன்றன்றி வாரா; இரண்டுவரினும் கண்ணுற்று நில்லா; பாவினத்துள்ளும் பயின்று வாரா எனக்கொள்க.

'ஒண்நிழற்சீர்' என்று சிறப்பித்தவதனுல் நிழல் என்னும் சொல்லிறுதியாகிய நிரையீற்றுப் பொதுச்சீர் எட்டும் வஞ்சியுள் அல்லது வாரா எனக்கொள்க.

இனி ஒருசாரார் வெண்பாவினுள் அளபெழுந்தால் நாலசைச்சீர் வரும் என்பார் உளராயினும், அவ்வாறு அலகிட்டு உதாரண வாய்பாட்டால் ஓசையூட்டும் பொழுது செப்பலோசை பிழைக்கும்† என்பதூஉம், ஆண்டுச்சீரும்

---

* கண்ணுற்று — இயைந்து

† பிழைக்கும் — கெடும்

தனையும் சிதைய வாராமையான் அளபெடுப்பனவுமல்ல; அளபெடுப்பினும் அளபெடைகள் அலகு காரியம் பெறுவன வும் அல்ல என்பதூஉம் காக்கை பாடினியார் முதலாகிய தொல்லாசிரியர் துணிபு. அதுவே இந்நாலுடையார்க்கும் உடன்பாடு.

## உதாரண முதல் நினைப்புக் காரிகை 1

'குன்றக் குறவன்' அகவல்;'பொன்
    ஞரம்'வெண் பாட்டு;வஞ்சிக்(கு)
ஒன்றும் உதாரணம் 'பூந்தா
    மரை'என்ப; ஓரசைச்சீர்
'நன்றறி வாரிற் கயவ'ரும்,
    'பாலொடு'; நாலசைச்சீர்க்(கு)
'அன்றவென் ஞர்','அள்ளற் பள்ளத்தி'
    ஞே(டு)'அங்கண் வானத்துமே' (கூ)

மேற்கூறிய ஐவகைச் சீர்க்கும் இக்காரிகை உதாரணம் கூறுகிறது.

ஆசிரிய உரிச்சீர் நான்கும் வந்ததற்கு உதாரணம் 'குன்றக்குறவன்' என்று தொடங்கும் ஆசிரியப்பா:-

'குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே'.

வெண்பா உரிச்சீர் நான்கும் வந்ததற்கு உதாரணம் 'பொன்ஞரம்' என்று தொடங்கும் வெண்பா:-

பொன்ஞர மார்பில் புனைகழல்கால் கிள்ளிபேர்
உன்னேன் என்(று) ஊழுலக்கை பற்றினேற்(கு)
— என்னே
மனநெடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனல்நாடன் பேரே வரும்'.

வஞ்சியுரிச்சீர் நான்கும் வந்ததற்கு உதாரணம் 'பூந் தாமரை' என்று தொடங்கும் குறளடி வஞ்சிப்பா:-

பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன் திரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்
நாளும்
மகிழு மகிழ்தூங் கூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே'.

மலர் என்ற ஓரசைச்சீர் வந்ததற்கு உதாரணம் 'நன்றறி வாரின்' எனத் தொடங்கும் குறள்:-

'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்'.

நாள் என்ற ஓரசைச்சீர் வந்ததற்கு உதாரணம் 'பாலொடு' எனத் தொடங்கும் குறள்:-

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலயி(று) ஊறிய நீர்'.

நாலசைச்சீர் பதினாறும் வந்ததற்கு 'அன்றவெண்ணார்' என்று தொடங்குவதும், 'அள்ளற்பள்ளத்து' என்று தொடங்குவதும், 'அங்கண் வானத்து' என்று தொடங்குவது மாகிய வஞ்சிப்பாக்கள் உதாரணங்களாம். அவற்றுள் முழுதும் கிடைக்கும் பாடல் வருமாறு:-

'அங் கண் வா னத் தமரரசரும்
வெங் களி யா னை வேல்வேந்தரும்
வடி வார் கூந் தல் மங்கையரும்
கடி மல ரேந் திக் கதழ்ந்திறைஞ்சச்
சிங் கஞ் சுமந் த மணியணைமிசைக்
கொங் கவி ரசோ கின் குளிர்நிழற்கீழ்ச்

செழு நீர்ப் பவ ளத் திரள்காம்பின்
முழு மதி புரை யு முக்குடைநீழல்
வெங் கண் வினைப் பகை விளிவெய்தப்
பொன் புனை நெடு மதில் புடைவளைப்ப
அனந் தா துட் டய மவையெய்த
நனந் தலை யுல குட னவைநீங்க
மந் தமா ருத* மருங்கசைப்ப
அந் தர துந் துபி நின்றியம்ப
இலங் குசா மரை* எழுந்தலமர
நலங் கிளர் பூ மழை நனிசொரிதர
இனிதிருந்து
அருணெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதும் சித்திபெறற் பொருட்டே'.

## 4. தளை

தன்சீர் தனதுஒன்றின் தன்தளை
யாம்;தண வாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக்
குரித்து;வல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பம் கலித்தளை
யாய்விடும்; வெண்தளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர்
விகற்பமும் ஒண்ணுதலே. (க0)

பொழிப்புரை: ஒளி பொருந்திய நெற்றியைக் கொண்ட பெண்ணே! யாதானும் ஒருசீர் நின்று தன் இறுதியசை வருஞ்சீர் முதலசையுடன் ஒன்றின் அவ்விரு சீர்க்கும் இடையில் தோன்றும் தளை அச்சீர்க்குரிய பாவின் தளையாம். வஞ்சியுரிச்சீரின் இறுதியசையோடு, வருஞ்சீர் முதலசை ஒன்றாததும் வஞ்சிப்பாவுக்கே உரிய தளையாகும். வெண்பா உரிச்சீரின் இறுதிச் சீரோடு வருஞ்சீர் முதலசை ஒன்றாதது கலிப்பாவுக்குரிய தளையாகும். ஆசிரிய உரிச்சீரின் இறுதிச்

* இக்குறியிட்ட இருசீர்களும் ந லசைச் சீர்களல்ல.

சீரோடு வருஞ்சீர் முதலசை ஒன்றுதது வெண்பாவுக்குரிய தளையாகும்.

நேர் முன் நேர் எனவும், நிரைமுன் நிரை எனவும் வருதல் ஒன்றுதல். நேர்முன் நிரை எனவும், நிரை முன்நேர் எனவும் வருதல் ஒன்றுமை.

இக்காரியிற் கூறப்படும் ஏழ்தளைகளாவன:

மா முன் நேர் — நேரொன்றாசிரியத்தளை*
மா முன் நிரை — இயற்சீர் வெண்டளை
விளம் முன் நேர் — இயற்சீர் வெண்டளை
விளம் முன் நிரை — நிரையொன்றாசிரியத்தளை*
காய் முன் நேர் — வெண்சீர் வெண்டளை*
காய் முன் நிரை — கலித்தளை
கனி முன் நேர் — ஒன்றுத வஞ்சித்தளை
கனி முன் நிரை — ஒன்றிய வஞ்சித்தளை

கடந்த காரிகையில் 'கண்ணிய பூவினம் காய்ச்சீரனைய; கனியோடொக்கும் ஒண்ணிழற்சீர்; அசைச்சீர், இயற்சீரொக்கும் ஒண்தளைக்கே' என்றதனாற் கொள்ளப்படும் சிறப்பில்லா ஏழ்தளைகள் :—

நாள் முன் நேர் — நேரொன்றாசிரியத்தளை
நாள் முன் நிரை — இயற்சீர் வெண்டளை
மலர் முன் நேர் — இயற்சீர் வெண்டளை
மலர் முன் நிரை — நிரையொன்றாசிரியத்தளை
பூ முன் நேர் — வெண்சீர் வெண்டளை
பூ முன் நிரை — கலித்தளை
நிழல் முன் நேர் — ஒன்றுத வஞ்சித்தளை
நிழல் முன் நிரை — ஒன்றிய வஞ்சித்தளை

தளை, பந்தம் என்ற சொற்கட்குப் பிணித்தல் கட்டுதல் என்பன பொருள்.

---

*இக்குறியிட்டன வருஞ்சீரோடு ஒன்றியதனால் அவ்வப் பாக்கட்கே உரிய தன்தளைகளாம். எஞ்சியவை ஒன்றுமையினால் பிறபாக்கட்குரிய பிறதளைகள்.

உதாரண முதல் நினைப்புக் காரிகை 2

'திருமழை' 'உள்ளார்' அகவல்;
'சிலைவிலங்' காகும்வெள்ளை;
மருளறு வஞ்சி'மங் தாங்லம்
வந்து';மை தீர்கலியின்
தெரிவுறு பந்தம்,நல் லாய்!'செல்வப்
போர்க்கதக் கண்ண'னென்ப(து)
'உரிமையின் கண்ணின்மை' ஓரசைச்
சீருக்(கு) உதாரணமே. (கக)

நல்லாய் - மகடூஉ முன்னிலை.

நிரை பொன்றுசிரியத் தளைகள் வந்தமைக்குத் 'திரு மழை' எனத் தொடங்கும் ஆசிரியப்பா உதாரணம்ஆகும்:—

'திருமழை தலைஇய இருணிற விசும்பின்
விண்ணதிர் இமிழிசை கடுப்பப்
பண்ணமைந் தவர்தேர் சென்ற வாறே'

நேரொன்றுசிரியத்தளைகள் வந்தமைக்கு 'உள்ளார் கொல்லோ' எனத் தொடங்கும் ஆசிரியப்பா உதாரணம் ஆகும்:—

'உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
அலங்குலை ஈந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவளம் ஏய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே.'

வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் வந்தமைக்குச் 'சிலை விலங்கு' எனத் தொடங்கும் வெண்பா உதாரணம் ஆகும்:—

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றுசிய நோக்கி
முலைவிலங்கிற்(று) என்று முனிவாள் — மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போது.'

ஒன்றிய வஞ்சித்தளையும், ஒன்றுத வஞ்சித்தளையும் வந்தமைக்கு 'மந்தாநிலம் வந்து' எனத் தொடங்கும் வஞ்சிப்பா உதாரணம் ஆகும் : —

'மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை
எனவாங்கு
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே.'

கலித்தளைகள் வந்தமைக்குச் 'செல்வப் போர்க் கதக் கண்ணன்' எனத் தொடங்கும் கலிப்பா உதாரணம் ஆகும்:—

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.'

ஓரரைச்சீர், 'உரிமையின் கண்ணின்மை' எனத்தொடங் கும் பாடலுள் வந்துள்ளது.

'உரிமை யின்கண் ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே.'

'மழைக் கண்ணாள்' என்றவிடத்து மலர்முன் நேர்வந்து இயற்சீர் வெண்தளை யாகிறது. 'செய் தீமையால்' என்ற விடத்து, நாள் முன் நேர்வந்து நேரொன்றுசிரியத்தளை யாகிறது.

## 5. அடி

குறள்,இரு சீரடி; சிந்து,முச்
சீரடி; நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு
நேரடி; ஐயொருசீர்
நிறைதரு பாத நெடிலடி
யாம்;நெடு மென்பணைத்தோள்
துறைகெழு வேல்கண்நல் லாய்!மிக்க
பாதம் கழிநெடிலே. (கஉ)

பொழிப்புரை: நெடிய மென்மையான பருத்த தோள்களையும், அஞ்சனத்தின் கறைபடிந்த கண்ணையும் உடைய பெண்ணே! இரு சீர்களைக் கொண்டது குறளடி. முச்சீர்களைக் கொண்டது சிந்தடி. நான்கு சீர்களைக் கொண்டது நேரடி என்றும் அளவடி என்றும் பெயர் பெறும். ஐந்து சீர்களைக் கொண்டது, நிறைவு பொருந்திய நெடிலடியாகும். ஐந்து சீர்களுக்கு மிக்க சீர்களால் வரும் அடி கழிநெடிலடி யாகும்.

குறளடிக்கு ஒற்றெழுத்து நீக்கி நான்குமுதல் ஆறு எழுத்துக்கள். சிந்தடிக்கு ஒற்றெழுத்து நீக்கி ஏழு முதல் ஒன்பது எழுத்துக்கள். அளவடிக்கு ஒற்றெழுத்து நீக்கிப் பத்து முதல் பதினன்கு எழுத்துக்கள். நெடிலடிக்கு ஒற்றெழுத்துநீக்கிப் பதினைந்துமுதல் பதினேழெழுத்துக்கள். கழிநெடிலடிக்கு ஒற்றெழுத்து நீக்கிப் பதினெட்டெழுத்து முதல் இருபதெழுத்துக்கள். இங்ஙனம் எழுத்தெண்ணுங்கால் ஒரோவழி குறுகிய இ, உ என்பனவும், ஆய்தமும் நீக்கப் பெறும். விரிவு தொல்காப்பியத்துள் காண்க. கழிநெடிலடிக்கு இருபதெழுத்துக்களே எல்லை வகுத்தமையை உட்கொண்டே எண்சீரின் மிக்க சீரான் வரும் கழிநெடிலடி சிறப்பில எனக் கூறுவர். அஃதொன்றே நோக்கிச் சிறப்பில என்பது ஏற்புடைத்தன்று.

## உதாரண முதல் நினைப்புக் காரிகை 3

'திரைத்த', 'இருது'குறள், சிந்து;
அளவடி 'தேம்பழுத்து';
விரிக்கும் நெடிலடி, வேல்நடுங்
கண்ணி!'வென் ருன்வினையின்';
'இரைக்கும், கணிகொண்ட, மூவடி
வோ(டு), இடம் கொங்கு'மற்றும்
கரிக்கைக் கவான் மருப்(பு) ஏர்முலை
மாதர்! கழிநெடிலே. (௧௫)

'வேல்நெடும் கண்ணி' என்பதும், 'கரிக்கைக் கவான் மருப்பு ஏர்முலை மாதர்' என்பதும் மகடூஉ முன்னிலை.

குறளடிக்கு உதாரணம் 'திரைத்த' எனத் தொடங்கும் வஞ்சித்துறை:—

'திரைத்த சாலிகை
நிரைத்த போனிரந்
திரைப்ப தேன்களே
விரைக்கொள் மாலையாய்'

சிந்தடிக்கு உதாரணம் 'இருது' எனத் தொடங்கும் வஞ்சி விருத்தம்:-

'இருது வேற்றுமை இன்மையால்
சுருதி மேல்துறக் கத்திஞேு(டு)
அரிது வேற்றுமை யாகவே
கருது வேல்தடங் கையினுய்'.

அளவடிக்கு உதாரணம் 'தேம்பழுத்து' எனத்தொடங்கும் கலிவிருத்தம்:-

'தேம்பழுத் தினியநீர் மூன்றும் திம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டீட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே'.

நெடிலடிக்கு உதாரணம் 'வென்றான் வினையின்' எனத் தொடங்கும் கலித்துறை:-

'வென்றான் வினையின் தொகையாய விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின்ஒழி யாது முற்றும்
சென்றான் திகழும் சுடர்சூழ்ஒளி மூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார் வினைநீங்கி நின்றார்'.

அறுசீர்க் கழிநெடிலடிக்கு உதாரணம் 'இரைக்கும்' எனத் தொடங்கும் ஆசிரிய விருத்தம்:-

'இரைக்கு மஞ்சிறைப் பறவைக ளெனப்பெயர்
இனவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் குழம்புகள் திகழ்ந்தெழ
நுடங்கிய விலையத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடல் திரையொடு
பொருதல தவியாதே.'

எழுசீர்க் கழிநெடிலடிக்கு உதாரணம் 'கணிகொண்ட' எனத் தொடங்கும் ஆசிரிய விருத்தம்:-

'கணிகொண் டலர்ந்த நறவேங்கை யோடு
கமழ்கின்ற காந்த ளிதழால்
அணிகொண் டலர்ந்த வனமாலை சூடி
அகிலாவி குஞ்சி கமழ
மணிகுண் டலங்கள் இருபாலும் வந்து
வரையாக மீது திவளத்
துணிகொண் டிலங்கு சுடர்வேலி னோடு
வருவானி தென்கொல் துணிவே'

எண்சீர்க் கழிநெடிலடிக்கு உதாரணம் 'மூவடி' எனத் தொடங்கும் ஆசிரிய விருத்தம்:-

'மூவடிவி னலிரண்டு சூழ்சுடரும் நாண
முழுதுலக மூடியெழின் முனைவயிர நாற்றித்
தூவடிவி னலிலங்கு வெண்குடையி னீழற்
சுடரோயுன் அடிபோற்றிச் சொல்லுவதொன்
றுண்டால்
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலங்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே

ஒன்பதின்சீர்க் கழிநெடிலடிக்கு உதாரணம் 'இடம்' எனத் தொடங்கும் ஆசிரிய விருத்தம்:-

'இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின் எதிர்ந்த தானையை
இலங்கும் ஆழியின் விலங்கியோள்
முடங்கு வாலுளை மடங்கல் மீமிசை முனிந்து சென்றுடன்
முரண்ட ராசனை முருக்கியோள்
வடங்கொண் மென்முலை நுடங்கு நுண்ணிடை மடந்தை சுந்தரி
வனங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை யிடங்கொள் சேவடி தலைக்கு வைப்பவர்
தமக்கு வெந்துயர் தவிர்க்குமே.'

பதின்சீர்க் கழிநெடிலடிக்கு உதாரணம் 'கொங்கு'எனத் தொடங்கும் ஆசிரிய விருத்தம்:-

'கொங்கு தங்கு கோதை யோதி மாத ரோடு
கூடு நீடு மோடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
நாத வென்று நின்று தாழ
அங்க புவ்வ மாதி யாய வாதி நூலி
னீதி யோது மாதி யாய
செங்கண் மாலை காலை மாலை சேர்நர் சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே.'

## நான்கு பாக்களுக்கும் உரிய அடியின் சிறுமையும் பெருமையும்

வெள்ளைக்(கு) இரண்டடி, வஞ்சிக்கு
முன்றடி,மூன்(று) அகவற்(கு)
எள்ளப் படாக்கலிக்(கு) ஈரிரண்
டாகும்இழி(பு); உரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே
பெருமை;ஒண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கண்சுரி
மென்குழல் காரிகையே! (கச

பொழிப்புரை: ஒளி பொருந்திய அவிழ் மலர்களை அணிந்த — கள்ளத் தன்மை கூடிய கரிய நெடிய கண்ணையும், நெளிவு பொருந்திய மெல்லிய குழலையும், கொண்ட பெண்ணே! வெண்பாவிற்கு இரண்டடிச் சிற்றெல்லை. வஞ்சிப்பாவுக்கும் அகவற்பாவுக்கும் மூன்றடிச் சிற்றெல்லை. குறைவு படாத கலிப்பாவுக்கு நான்கடிச் சிற்றெல்லை. பேரெல்லை, பாடுவோனது மனக்கருத்தின் அளவேயாகும். (வரையறை இல்லை)

## குணசாகரர் விளக்க உரையில் சில பகுதிகள்

'எள்ளப்படாக் கலிக்கு' என்று சிறப்பித்த வதனால் துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர் நாலடியான் வருவது தரவு கொச்சகக் கலிப்பா என்றும், துள்ளலோசையிற் சிறிது வழுவி நாற்சீர் நாலடியான் வருவது கலிவிருத்தம் என்றும் தெரிந்துணரப்படும் எனக்கொள்க.

'வெள்ளைக்கு இரண்டாம், அகவற்கு மூன்று, கலிக்கு அடி நான்கு; எள்ளப்படா வஞ்சிப் பாவிற்கு மூன்றும் இழிபு' என்று பாக்களை முறையிற் கூறுது தலைதடுமாற்றமாகக் காரிகை சொல்ல வேண்டியது என்னையோ எனின், தலை தடுமாற்றம் தந்து புணர்த்துரைத்தல் என்பது தந்திர உத்தியாகலின். அன்றியும் மயேச்சுரர் முதலாகிய ஒருசார் ஆசிரியர் வஞ்சிப்பா இரண்டடியானும் வரப்பெறும் என்றுரெரன்பதூஉம், ஆசிரியப்பா இரண்டடிச் சுரிதகமாய் வரப் பெறும் என்றுரென்பதூஉம் அறிவித்தற்கு எனக் கொள்க. மயேச்சுரர் வஞ்சிச் சிறுமைக்குக் காட்டும் பாட்டு:—

'பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார்
(அதனால்
அறிவனது) அடியிணை பரவிப்
பெறுகுவர் யாவரும் பிறவியில் நெறியே )

உதாரண முதல்நினைப்புக் காரிகை 4

'அறத்தா(று) இதுவென' வெள்ளைக்(கு)
இழி(பு);அக வல்(கு)இழிபு
குறித்தாங்(கு) உரைப்பின் 'முதுக்குறைந்(து)'
ஆம்;குறை யாக்கலியின்
திறத்தா(று) இது செல்வப் போர்';'செங்கண்
மேதி'வஞ் சிச்சிறுமை;
புறத்தாழ் கருமென் குழல்,திரு
வேயன்ன பூங்கொடியே! (கரு)

ஈற்றடி மகடூஉ முன்னிலை.

இரண்டடிச் சிற்றெல்லை கொண்டமைக்கு உதாரணம் அறத்தாறு' எனத் தொடங்கும் குறள் வெண்பா:-

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.'

மூன்றடிச் சிற்றெல்லை கொண்டமைக்கு உதாரணம் 'முதுக்குறைந்தனளே' எனத் தொடங்கும் ஆசிரியப்பா:-

'முதுக்குறைந் தனளே; முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேல் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே'

நான்கடிச் சிற்றெல்லை கொண்டமைக்கு உதாரணம் 'செல்வப்போர்' எனத்தொடங்கும் கலிப்பா:-

' செல்வப்போர் ... ... ... ஒளித்ததே*

மூன்றடிச் சிற்றெல்லைக்கு உதாரணம் 'செங்கண்மேதி' எனத்தொடங்கும் கலிப்பா:-

'செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கண் நீலத்(து) அலரருந்திடப்
பொழில்காஞ்சி நிழல்துயிலும்
( செழுநீர்
நல்வயல் கழனி யூரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.)'

---

*இச்செய்யுளை இந்நூலின் கஅ ஆவது பக்கத்தில் காண்க

## 6. தொடை

எழுவாய் எழுத்(து)ஒன்றின் மோனை;
இறுதி இயை(பு);இரண்டாம்
வழுவா எழுத்(து) ஒன்றின், மாதே!
எதுகை; மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்;அடி
தோறும் முதல்மொழிக்கண்
அழியா(து) அளபெடுத்து ஒன்றுவ
தாகும் அளபெடையே. (கசு)

பொழிப்புரை : மாதே! ஒவ்வொரு அடியின் முதலெழுத்தும் ஒரே எழுத்தாக அமைவது அடிமோனை. அடிதோறும் இறுதிக்கண் சொல்லாவது எழுத்தாவது ஒன்றாக அமைவது அடியியைபு அடிதோறும் முதற்சொல்லின் இரண்டாவதெழுத்து (முதலெழுத்து மாத்திரையளவால் ஒத்திருக்க) ஒன்றாக வருவது அடியெதுகை. அடிதோறும் மாறுபட்ட சொல்லாவது பொருளாவது முதலில் வருவது அடிமுரண். அடிதோறும் முதற்சொல்லில் ஒரே வகை அளபெடை வருவது அடியளபெடை

தொடை – மாலை; மாலைபோலத் தொடுக்கப் படுதலின் இவை தொடை எனப் பெற்றன. மோனை - (முகனை) முதல்; இயைபு-ஒத்தல்; எதுகை-பொருத்தம்; முரண்–மாறுபாடு; அளபெடை – அளவில் மிகுவது,

இக்காரிகை பொதுவகையான் மோனை முதலாயினவற்றுக்கு இலக்கணம் கூறிற்று என்பார் கூற்றுப் பொருந்தாது. அங்ஙனம் கூறின் ‘அடிதோறும்’ என்ற சொல் வெற்றெனத் தொடுத்ததாகும். அன்றியும், அடி முரண் ஆகியவற்றிற்கு ஆசிரியர் இலக்கணம் கூறுதவராவர்

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'இரண்டாம் எழுத்தொன்றின் எதுகை' என்னாது 'வழுவா எழுத்து' என்று மிகுத்துச் சொல்லியவதனால், இரண்டாமெழுத்து ஒன்றி வரினும், முதலெழுத்து எல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து கட்டு என்பதற்குப் பட்டு என்பதல்லது, பாட்டு என்பது எதுகையாகாது; காட்டு என்பதற்குப் பாட்டு என்பதல்லது பட்டு என்பது எதுகையாகாது எனக் கொள்க.'

'மொழியான் வரினும் என்ற உம்மையால் பொருளான் வரினும் என்பதாயிற்று.'

### மேலும் சில தொடைகள்

அந்தம் முதலாத் தொடுப்ப(து)அந்
　　தாதி, அடிமுழுதும்
வந்த மொழியே வருவ(து)
　　இரட்டை வரன்முறையான்;
முந்திய மோனை முதலா
　　முழுதும்ஒவ் வாதுவிட்டால்
செந்தொடை நாமம் பெறும்;நறு
　　மென்குழல் தேமொழியே! (கஎ)

பொழிப்புரை:- மணம் பொருந்திய மென்மையான கூந்தலையும், இனிய மொழியினையும் கொண்ட பெண்ணே! ஓர் அடியின் ஈற்றிலுள்ள எழுத்தாவது அசையாவது சீராவது அடுத்த அடியின் தொடக்கத்தில் வருவது- ஓர் அடியே மீண்டும் வருவது- அந்தாதித் தொடை. ஓர் அடியின் முதலில் வந்த சொல் அவ்வடி முழுவதும் முறைமையுடன் வருவது இரட்டைத்தொடை. மோனை முதலாக இரட்டை ஈறாகச் சொல்லப்பட்ட எவ்வகைத் தொடையோடும் இயையாதது செந்தொடை.

அந்தாதி - முடிவு முதலாவது; இரட்டை - இரட்டித்து வருவது; செம்மை+தொடை - செந்தொடை; மேற்கூறிய எவ்வகைத் தொடையுள்ளும் அடங்காமலேயே தானொரு சிறந்த தொடையானமையின் செந்தொடை எனப்பெற்றது.

## குணசாகரர் விளக்க உரையில் சில பகுதிகள்

(இரட்டைத்தொடை கூறுங்கால்) 'வரன்முறையான்' என்று மிகுத்துச் சொல்லியவதனால் ஈற்றெழுத்து ஒன்று குறையினும் இழுக்காது. நாற்சீரின் மிக்குவரப்பெறுது எனக்கொள்க.

'முந்திய மோனை' என்று சிறப்பித்தவதனால் அசையும் சீரும் தம்முள் மறுதலைப்படத் தொடுப்பது (செந்தொடைக்குச்) சிறப்புடைத்தெனக் தெனக் கொள்க.

## உதாரண முதல் நினைப்புக் காரிகை 5

'மாவும் புள்'மோனை; இயை(பு)'இன்
னகை';'வடி யேர்'எதுகைக்(கு);

ஏவில் முரணும் 'இருள்பரந்(து)';
ஈண்(டு)அள(பு) 'ஆஅவளிய';

ஓவில்அந் தாதி 'உலகுட
னும்';'ஒக்கு மே'இரட்டை;

பாவரும் செந்தொடை 'பூந்த'என்
றுகும்; பணிமொழியே! (கஅ)

'பணிமொழியே' என்பது மகடூஉ முன்னிலை.

அடியெதுகைக்கு உதாரணம் 'மாவும் புள்' எனத் தொடங்கும் ஆசிரியப்பா :—

'மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடை
மாயோள் இன்னுயிர்ப் புறத்திறுத் தன்றே'

அடியியைபுக்கு உதாரணம் 'இன்னகை' எனத் தொடங்கும் ஆசிரியப்பா : —

'இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே
ஆடமைத் தோளி யூடலும் அணங்கே
அரிமதர் மழைக்கணும் அணங்கே
திருநுதல் பொறித்த திலகமும் அணங்கே'

அடியெதுகைக்கு 'உதாரணம் வடியேர்' எனத் தொடங்கும் இன்னிசை வெண்பா :—

'வடியேர்கண் ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்
கடியார் கனங்குழாய் காணார்கொல் காட்டில்
இடியின் முழக்கஞ்சி யீர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை'

அடிமுரணுக்கு உதாரணம் 'இருள்பரந்து' எனத் தொடங்கும் ஆசிரியப்பா :—

'இருள்பரந் தன்ன மாநீர் மருங்கில்
நிலவுக்குவித் தன்ன வெண்மண லொருசிறை
இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னி னன்ன நுண்டா துறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணு முடையவா லணங்கே'

அடியளபெடைக்கு உதாரணம் 'ஆஅவளிய' எனத் தொடங்கும் பஃறொடை வெண்பா :—

'ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோ
டிஇ ரிரையுங்கொண் டீரளைப் பள்ளியுள்
தூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதால்
ஓஒ உழக்குந் துயர்'

அந்தாதிக்கு உதாரணம் 'உலகுடன்' எனத் தொடங்கும் ஆசிரியப்பா :—

'உலகுடன் விளக்கும் ஒளிதிகழ் அவிர்மதி
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை யாசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவன்
ஆசனத் திருந்த திருத்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தர தென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே'

இரட்டைத் தொடைக்கு உதாரணம் 'ஒக்குமே' எனத் தொடங்கும் சிந்தியல் வெண்பா :—

'ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சீறெரி யொக்குமே யொக்குங்
குளக்கொட்டிப் பூவின் நிறம்'.

செந்தொடைக்கு உதாரணம் 'பூத்த' எனத் தொடங்கும் ஆசிரியப்பா:—

'பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலினம் அகவு நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே'

## தொடை விகற்பம்

இருசீர் மிசைஇணை யாகும்;
 பொழிப்(பு)இடை யிட்(டு);ஒருஉவாம்
இருசீர் இடையிட்ட(து); ஈறிலி
 கூழை; முதல்இறுவாய்
வருசீர் அயல்இல மேல்கீழ்
 வகுத்த,மை தீர்கதுவாய்;
வருசீர் முழுவதும் ஒன்றின்முற்
 றும்என்ப மற்றவையே. (கஃ)

பொழிப்புரை:- அடியின் முதலிருசீர்களிலும் மோனை முதலாயினவரின் இணை; முதற்சீரிலும் மூன்றும் சீரிலும் மோனை முதலாயினவரின் பொழிப்பு; முதற்சீரிலும் நான்காம் சீரிலும் மோனை முதலாயின வந்து இடை இரு சீர்க்கண் அமையாதது ஒரூஉ; முதல் மூன்று சீர்களிலும் மோனை முதலாயின வந்து ஈற்றுச் சீர்க்கண் அமையாதது கூழை; இரண்டாஞ்சீர் ஒழித்து எஞ்சியசீர்களில் மோனை முதலாயின வரின் மேற்கதுவாய்; மூன்றும்சீர் ஒழித்து எஞ்சிய சீர்களில் மோனை முதலாயினவரின் முற்று.

முதல் அயலிய மேல்கதுவாய் என்றும், இறுவாய் அய லில கீழ்க்கதுவாய் என்றும் கூட்டுக.

இவை அளவடிக்கே பொருந்துவன, 'மோனை முதலா யின' என்பதில் அந்தாதி, இரட்டை, செந்தொடை ஆகிய மூன்றும் அடங்கா. அம்மூன்றனுக்கும் விகற்பங்கள் இல.

கற்பம் - விதி; விகற்பம் - விதிகடந்தது - பெருகுவது; வேறுபாடு எனினுமாம்.

இணை - இரண்டு; பொழிப்பு - சிறப்புடையது; ஒரூஉ - விட்டு நீங்குதல்; இடைவெளியாக இரண்டு சீர்களை விடு தலின் இப்பெயர் பொருந்துகிறது. கூழை - இறுதி குறைந் தது; மேல்கதுவாய் - பிற்பகுதியில் விடாது பற்றுவது; கீழ்க்கதுவாய் - முற்பகுதியில் விடாது பற்றுவது; முற்று - முழுவதுமுள்ளது.

## ஆகத் தொடையும் தொடை விகற்பமும் 43.
### அவை வருமாறு:-

1 அடிமோனை
2 இணைமோனை
3 பொழிப்புமோனை
4 ஒரூஉமோனை
5 கூழைமோனை
6 மேற்கதுவாய்மோனை
7 கீழ்க்கதுவாய்மோனை
8 முற்றுமோனை
9 அடிஇயைபு
10 இணை இயைபு
11 பொழிப்பு இயைபு
12 ஒரூஉ இயைபு
13 கூழை இயைபு
14 மேற்கதுவாய் இயைபு
15 கீழ்க்கதுவாய் இயைபு
16 முற்று இயைபு
17 அடியெதுகை
18 இணை எதுகை
19 பொழிப்பெதுகை
20 ஒரூஉ எதுகை
21 கூழை எதுகை
22 மேற்கதுவாய் எதுகை
23 கீழ்க்கதுவாய் எதுகை
24 முற்றெதுகை
25 அடிமுரண்
26 இணை முரண்
27 பொழிப்பு முரண்
28 ஒரூஉ முரண்
29 கூழை முரண்
30 மேற்கதுவாய் முரண்
31 கீழ்க்கதுவாய்முரண்
32 முற்று முரண்
33 அடியளபெடை
34 இணையளபெடை
35 பொழிப்பளபெடை
36 ஒரூஉ அளபெடை
37 கூழையளபெடை
38 மேற்கதுவாய் அளபெடை
39 கீழ்க்கதுவாய் அளபெடை
40 முற்றளபெடை
41 அந்தாதி
42 இரட்டை
43 செந்தொடை

## குணசாகரர் விளக்க உரையில் சில பகுதிகள்

முதலயற் சீர்க்கண், இல்லாததனை கீழ்க்கதுவாய் என்றும், ஈற்று அயற்சீர்க்கண் இல்லாததனை மேற்கதுவாய் என்றும் வேண்டினார் கையடனார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு 'மைதீர் கதுவாய்' என்று விதப்புரைத்தார் எனக் கொள்க.

'சீர் முழுதும் ஒன்றின் முற்றும்' என்னாது 'வருசீர்' என்று சிறப்பித்தது இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பமும் அளவடிக்கண்ணே வழங்கப்பெறும் என்பதூஉம், இணைஇயைபு முதலாகிய ஏழுவிகற்பமும் இறுதிச்சீரே முதற்சீராகக்கொண்டு வழங்கப்படும் என்ப தூஉம் அறிவித்தற்கெனக் கொள்க.

## உதாரண முதல் நினைப்புக் காரிகை 6

மோனை விகற்பம் 'அணிமலர்';
'மொய்த்துட னும்'இயைபிற்(கு);
ஏனை எதுகைக்(கு) இனம்'பொன்னி
னன்ன'; இனி,முரணிற்(கு)
ஆன விகற்பமும் 'சீறடிப்
பேர்'அ(து); அளபெடையின்
தான விகற்பமும் 'தாஅட்டாஅ
மரை'யென்ப தாழ்குழலே. (௨௦)

மோனை விகற்பங்கட்கு உதாரணம் 'அணிமலர்' என்று தொடங்கும் ஆசிரியப்பா :—

" அணிமலர் அசோகின் றளிர்நலங் கவற்றி (இணைமோனை)
அரிக்குரற் கிண்கிணி அரற்றுஞ் சீறடி (பொழிப்பு)
அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி (ஒரூஉ)
அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல் (கூழை)
அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள் (மேற்கதுவாய்)
அவிர்மதி அனைய திருநுதல் அரிவை (கீழ்க்கதுவாய்)
அயில்வேல் அனுக்கி அம்பலைத்து அமர்ந்த (முற்று)
கருங்கயல் நெடுங்கணோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே."

இயைபு விகற்பங்கட்கு உதாரணம் 'மொய்த்துடன்' என்று தொடங்கும் ஆசிரியப்பா :—

“மொய்த்துடன் றவழு முகிலே பொழிலே (இணை இயைபு)
மற்றத னயலே முத்துறழ் மணலே (பொழிப்பு)
நிழலே இனியத னயலது கடலே (ஒரூஉ)
மாதர் நகிலே வல்லே யியலே (கூழை)
வில்லே நுதலே வேற்கண் கயலே (மேற்கதுவாய்)
பல்லே தளவம் பாலே சொல்லே (கீழ்க்கதுவாய்)
புயலே குழலே மயிலே யியலே (முற்று)
அதனால்,
இவ்வயின் இவ்வுரு இயங்கலின்
எவ்வயி னோரு மிழப்பர்தந் நிறையே.”

எதுகை விகற்பங்கட்கு உதாரணம் ‘பொன்னினன்ன’ எனத் தொடங்கும் ஆசிரியப்பா:—

“பொன்னி னன்ன பொறிசுணங் கேந்திப் (இணைஎதுகை)
பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி (பொழிப்பு)
மின்னவி ரொளிவடந் தாங்கி மன்னிய (ஒரூஉ)
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி (கூழை)
என்னையு மிடுக்கண் துன்னுவித் தின்னடை (மேற்கதுவாய்)
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க் (கீழ்க்கதுவாய்)
கன்னியம் புன்னை யின்னிழல் துன்னிய (முற்று)
மயிலேய் சாயலவ் வாணுதல்
அயில்வேல் உண்கணெம் அறிவுதொலைத் தனவே.”

முரண் விகற்பங்கட்கு உதாரணம் ‘சீறடிப்பேர்’ எனத் தொடங்கும் ஆசிரியப்பா :—

“சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு (இணை முரண்)
சுருங்கிய நுசுப்பிற் பெருகுவடந் தாங்கிக் (பொழிப்பு)
குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து (ஒரூஉ)
சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன் (கூழை)
வெள்வளைத் தோளுஞ் சேயரிக் கருங்கணும் (மேற்கதுவாய்)
இருக்கையு நிலையும் ஏந்தெழி லியக்கமும் (கீழ்க்கதுவாய்)
துவர்வாய்த் தீஞ்சொலு முவந்தெனை முனியாது (முற்று)
என்றும் இன்னண மாகுமதி
பொன்திகழ் நெடுவேற் போர்வல் லோயே.”

அளபெடை விகற்பங்கட்கு உதாரணம் 'தாஅட்டாஅ மரை' எனத்தொடங்கும் ஆசிரியப்பா :—

" தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப் (இணையளபெடை)
பூஉக் குவளைப் போஒ தருந்திக் (பொழிப்பு)
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய் (ஒரூஉ)
மாஅத் தாஅண் மோஒட் டெருமை (கூழை)
தேஎம் புனலிடைச் சோஒர் பாஅல் (மேற்கதுவாய்)
மீஇ னுஅர்த் துகளும் சீஇர் (கீழ்க்கதுவாய்)
ஆஅ னுஅ நீஇ ணீஇர் (முற்று)
ஊரன் செய்த கேண்மை
ஆய்வளைத் தோளிக் கலரா னவே.

# 2. செய்யுளியல்

இவ்வியல் செய்யுட்கள் பற்றியும் செய்யுட்களின் இனம் பற்றியும் கூறுதலால் செய்யுளியல் என்ற பெயரைப் பெறுகிறது.

## பாவுக்குரிய அடியும் ஓசையும்

வெண்பா அகவல் கலிப்பா
அளவடி; வஞ்சிஎன்னும்
ஒண்பா அடிகுறள், சிந்தென்
றுரைப்ப; ஒலிமுறையே
திண்பா மலிசெப்பல், சீர்சால்
அகவல், சென் றேங்குதுள்ளல்
நண்பா அமைந்த நலம்மிகு
தூங்கல் நறுநுதலே! (௨௧)

பொழிப்புரை: மணம்பொருந்திய நெற்றியைக்கொண்ட பெண்ணே! வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா என்னும் மூன்று பாக்களும் அளவடியான் (நாற்சீரடியான்) வரும். சிறப்பான வஞ்சிபாக் குறளடியானும் (இருசீரடியானும்), சிந்தடியானும் (முச்சீரடியானும்) வரும். முறையே வெண்

பாவுக்குத் திண்மையாகப் பாக்களிலே ஒலித்தற்குரிய செப்பலோசையும், ஆசிரியப்பாவுக்குச் சீர் மிகுந்த அகவலோசையும், கலிப்பாவுக்குப் ஓங்கிச் செல்லும் துள்ளலோசையும், வஞ்சிப்பாவுக்குப் பாக்களிலே நண்ணும்படியான, நலம் மிகுந்த தூங்கலோசையும் உரியன.

பா – பரத்தல் – விரிந்திருத்தல்.

ஈண்டு, ஓசை என்பது எழுத்து அசைசீர் முதலிய உறுப்புக்களால் செய்யுளிலே இயல்பாகத் தோன்றும் இசை.

செப்பல் – செப்பம் உடைய ஓசை, செப்பிக்கூறும் ஓசை என்பதும் ஒன்று. அகவல்–அழைத்துக் கூறுவதாய ஓசை. இவ்விரண்டும் ஒழுகிச் செல்லும் தன்மையன. துள்ளல் – துள்ளிச்செல்லும் ஓசை. தூங்கல் – தணிந்து செல்லும் ஓசை. இவையிரண்டும் ஒழுகிச் செல்லாதன; உயர்ந்தும் தாழ்ந்தும் வருவன.

செப்பலோசையின் வகைகள்:

ஏந்திசைச் செப்பல் — வெண்சீர் வெண்டளையான் வருவது

தூங்கிசைச் செப்பல் — இயற்சீர் வெண்டளையான் வருவது

ஒழுகிசைச் செப்பல் — வெண்சீர் வெண்டளையும், இயற்சீர் வெண்டளையும் கலந்து வருவது

அகவலோசையின் வகைகள்:

ஏந்திசையகவல் — நேரொன்றாசிரியத்தளையான் வருவது

தூங்கிசையகவல் — நிரையொன்றாசிரியத் தளையான் வருவது

ஒழுகிசையகவல் — நேரொன்றாசிரியத்தளையும், நிரையொன்றாசிரியத்தளையும் கலந்து வருவது

துள்ளலோசையின் வகைகள்:

ஏந்திசைத்துள்ளல் — கலித்தளையான் வருவது

அகவல் துள்ளல்–வெண்சீர் வெண்டளையும் கலித்தளையும் கலந்து வருவது

பிரிந்திசைத் துள்ளல் — பலதளைகளும் கலந்து வருவது

தூங்கலோசையின் வகைகள்:

ஏந்திசைத் தூங்கல்—ஒன்றிய வஞ்சித்தளையான் வருவது
அகவல் தூங்கல் — ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது
பிரிந்திசைத் தூங்கல் — பல தளைகளும் கலந்து வருவது

உதாரணங்கள் வருமாறு:

ஏந்திசைச் செப்பலுக்குக் குறள் வெண்பா
'யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு ?'
தூங்கிசைச் செப்பலுக்குக் குறள் வெண்பா
'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்'
ஒழுகிசைச் செப்பலுக்குக் குறள் வெண்பா
'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைக்கூப்பி
எல்லா உயிரும் தொழும்'
ஏந்திசையகவலுக்கு நேரிசை யாசிரியப்பா
'போதுசாந்தம் ...... துன்னுவாரே' *
தூங்கிசையகவலுக்கு நேரிசை யாசிரியப்பா
'அணிநிழல் ...... பரிசறுப்பவரே' †
ஒழுகிசையகவலுக்கு நேரிசை யாசிரியப்பா
'குன்றக் குறவன் ...... சுணங்கே' ‡

ஏந்திசைத் துள்ளலுக்குத் தரவுகொச்சகக் கலிப்பா

'முருகவிழ்தா மரைமலர்மேல் முடியிமையோர்
புடைவரவே
வருசினனார் தருமறைநூல் வழிபிழையா மனமுடையார்
இருவினைபோய் விழமுனியா எதிரியகா தியையரியா
நிருமலராய் அருவினராய் நிலவுவர்சோ தியினிடையே'

---

* இப்பாடலை இந்நூலின் கு ஆம் பக்கத்தில் காண்க
† இப்பாடலை இந்நூலின் கு ஆம் பக்கத்தில் காண்க
‡ இப்பாடலை இந்நூலின் கஉ ஆம் பக்கத்தில் காண்க

அகவல் துள்ளலுக்குத் தரவுகொச்சகக்கலிப்பா

'செல்வப்போர் ...... ஒளித்ததே' *

பிரிந்திசைத் துள்ளலுக்குத் தரவுகொச்சகக்கலிப்பா

'குடநிலைத் தண்புறவிற் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவில் தகையேறு மரம்பாய்ந்து
வீங்குமணிக் கயிறொரீஇத் தாங்குவனத் தேறப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப
எனவாங்கு
ஆனொடு புல்லிப் பெரும்புதல் முனையும்
கானுடைத்(து) அவர்தேர் சென்ற வாறே.'

ஏந்திசைத் தூங்கலுக்கு வஞ்சிப்பா

'வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்தினர்
நாளும்
மயலார் நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே.'

அகவல் தூங்கலுக்கு வஞ்சிப்பா

'வானோர்தொழ வண்தாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாவருள் கூரறிவனைக்
காணார்
மலர்கொண் டேத்தி வணங்குநர்
பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே.'

பிரிந்திசைத் துள்ளலுக்கு வஞ்சிப்பா

'மந்தாநிலம் ...... மகிழ்ந்தே' †

---

* இப்பாடலை இந்நூலின் ௧அ ஆம் பக்கத்தில் காண்க

† இப்பாடலை இந்நூலின் ௧அ ஆம் பக்கத்தில் காண்க

## குணசாகரர் உரை விளக்கத்திலிருந்து ஒரு பகுதி

'வஞ்சியென்னும் ஒண்பா' என்று சிறப்பித்தவதனுல் வெண்பாவின் ஈற்றடியும், நேரிசை யாசிரியப்பாவின் ஈற்றயலடியும், கலிவெண்பாவின் ஈற்றடியும் முச்சீரான் வரப்பெறும் என்றும், இணைக்குறளாசிரியப்பாவின் இடையடிகள் இரண்டும் பலவும் குறளடியானும், சிந்தடியானும் வரப்பெறும் என்றும், கலியினுள்ளும் ஒருசார் அம்போதரங்க உறுப்பும் இருசீரடியானும், முச்சீரடியானும் வரப்பெறும் என்றும் கொள்க. (கலிப்பாவினுள்) அராக உறுப்புக்கள் அளவடி முதலாய எல்லா அடியானும் வரப்பெறும் என்றும் கொள்க.

### உதாரண முதல்நினைப்புக் காரிகை – 7

'வளம்பட' என்பது வெள்ளைக்கு;
அகவற்(கு) உதாரணம் 'செங்
களம்படக் கொன்று'; கலிக்(கு) 'அரி
தாய'; கண் ணார்கொடிபோல்
துளங்கிடை மாதே! 'சுறமறி'
'தொன்னலத் தின்புலம்(பு)' என்(று)
உளங்கொடு நாவலர் ஓதினர்
வஞ்சிக்(கு) உதாரணமே. ௨௨

'கண்ஆர் கொடிபோல் துளங்குஇடை மாதே!' என்பது மகடூஉ முன்னிலை.

அளவடியானும், செப்பலோசையானும் வந்தமைக்கு உதாரணம் 'வளம்பட'எனத்தொடங்கும் இன்னிசை வெண்பா:

'வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
அளந்தன போக மவரவ ராற்ருன்
விளங்காய் திரட்டினு ரில்லைக் — களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்.'

அளவடியானும், அகவலோசையானும் வந்தமைக்கு உதாரணம் 'செங்களம்படக்கொன்று' எனத் தொடங்கும் நேரிசை ஆசிரியப்பா :-

'செங்களம் படக்கொன்(று) அவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பிற் செங்கோட் டியானை
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.'

அளவடியானும், துள்ளலோசையானும் வந்தமைக்கு உதாரணம் 'அரிதாய' எனத் தொடங்கும் நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா :-

"அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி;

இது தரவு.

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலைக் கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே;

இன்பத்தின் இகந்தொரீஇ யிலைதீய்ந்த உலவையால்
துன்புறூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே;

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
இன்னிழ லின்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு
முரைத்தனரே."

இவை மூன்றுந் தாழிசை.

எனவாங்கு,

இது தனிச்சொல்.

இணைநலம் உடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே."

இஃது ஆசிரியச் சுரிதகம்.

இருசீரடியானும், தூங்கலோசையானும் வந்தமைக்கு உதாரணம் 'சுறமறி' எனத்தொடங்கும் குறளடி வஞ்சிப்பா :-

"சுறமறிவன துறையெல்லாம்
இறவின்பன வில்லெல்லாம்
மீன்றிரிவன கிடங்கெல்லாம்
தேன்சூழ்வன பொழிலெல்லாம்
எனவாங்கு,
தண்பணை தழீஇய விருக்கை
மண்கெழு நெடுமதின் மன்ன னூரே."

முச்சீரடியானும், தூங்கலோசையானும் வந்தமைக்கு உதாரணம் 'தொன்னலத்தின் புலம்பு' எனத்தொடங்கும் சிந்தடி வஞ்சிப்பா:-

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி
என்னலத்தகை யிதுவென்னென எழில்காட்டிச்
சென்னலத்தகைப் பொருள்கருத்தி னிற்சிறந்தாங்
கெனப்பெரிதும்
கலங்கஞரெய்தி விடுப்பவும்
சிலம்பிடைச் செலவுஞ் சேணிவந் தற்றே.'

## 1. வெண்பா

வெண்பா என்னும் இப்பகுதியுள் குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச்சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா என்பனவற்றிற்கும், குறட்டாழிசை குறள்வெண் செந்துறை என்பனவற்றிற்கும், வெண்டாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம் என்பனவற்றிற்கும் இலக்கணங்கள் கூறப்பெறும்.

## குறள் வெண்பா, நேரிசை வெண்பா

ஈரடி வெண்பாக் குறள்;குறட்
  பாஇரண் டாய்,இடைக்கண்
சீரிய வான்தனிச் செல்,அடி
  மூய்ச்,செப்ப லோசைகுன்றா(து)
ஓரிரண் டாயும், ஒருவிகற்
  பாயும் வருவதுண்டேல்
நேரிசை யாகும்; நெரிசுரி
  பூங்குழல் நேரிழையே!

பொழிப்புரை: நெரிந்த, வளைவுகளும் பூக்களும்கொண்ட குழலையுடைய, அரிய அணிகள் அணிந்த பெண்ணே! வெண்பா இலக்கணங்களைக்கொண்டு இரண்டடிகளாலான பாடல் குறள் வெண்பா ஆகும். அத்தகைய குறட்பாக்கள் இரண்டாகி, இடையில் (முதற் குறள் வெண்பாவின் இறுதியில்) சிறந்த உயரிய தனிச்சொல் இட்டு நிரப்பிச் செப்பலோசை பிழையாது பாடப்பெறின் நேரிசை வெண்பா எனப் பெயர் பெறும்.

### வெண்பாவின் பொதுவிலக்கணம்

1. செப்பலோசை கொண்டது.

2. வெண்சீரும் இயற்சீரும் பெறுவது.

3. (வெண்சீர், இயற்சீர்) வெண்டளைகளே பெறுவது; வேற்றுத்தளைகள் வாரா.

4. இறுதிச்சீர், நாள் மலர் காசு பிறப்பு என்னும் வாய்பாடுகளில் யாதேனும் ஒன்றைப்பெறுவது.

5. ஈற்றடி சிந்தடியாகவும், ஏனைய அடிகள் அளவடியாகவும் பெறுவது.

வெண்பா எனினும், வெள்ளை எனினும், முதற்பா எனினும் வண்பா எனினும் ஒக்கும்.

வெண்பா என்பது நிறத்தினடியாகப் பெற்ற பெயர். வேற்று நிறங்கள் கலக்க வெள்ளை நிறம் கெடுதல் போலச் செப்பலோசையல்லாது வேற்று ஓசைகலக்க வெண்பாக் கெடும்.

குறள் வெண்பா ஒரு விகற்பத்தால் வந்ததற்கு உதாரணம் :-

'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்'

குறள் வெண்பா இருவிகற்பத்தால் வந்ததற்கு உதாரணம் :-

'உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்
அச்சாணி யன்னா ருடைத்து' [தேர்க்(கு)

நேரிசை வெண்பா எனினும், இருகுறள் நேரிசை வெண்பா எனினும் ஒக்கும். செறிவும் வன்மையும் பெற்றுவருவது நேரிசை.

இருவிகற்பத்தான் வந்த நேரிசை வெண்பாவுக்கு உதாரணம் :-

'தடமண்டு தாமரையின் தாதாா(டு) அலவன்
இடமண்டிச் செல்வதனைக் கண்டு — பெடைஞெண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்(து)
ஊழிநா டாயினான் ஊர்'

தனிச்சொல், முதலில் எடுத்த எதுகையை ஒட்டியதாயிருத்தல் காண்க.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

இரண்டு குறள் வெண்பாவாய், நடுவு முதல் தொடைக் கேற்ற தனிச்சொல் அடிநிரம்பிச், செப்பலோசை வழுவாது முதலிரண்டடியும் ஒரு விகற்பமாய்க் கடையிரண்டடியும் மற்றொரு விகற்பமாய் வரினும், நான்கடியும் ஒருவிகற்பமாய் வரினும், இருகுறள் நேரிசை வெண்பா எனப்படும்.

'சீரிய வான்தனிச் சொல்லடி மூய்' என்று சிறப்பித்த வதனால் முதற்குறட்பாவினோடு தனிச்சொல் இடைவேறு

பட்டுவிட்டிசைப்பின் ஒற்றுமைப்படாத உலோகங்களை, ஒற்றுமைப்படப் பற்றுசிட்டு விளக்கினற்போல முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஒன்றும், இரண்டும் அசைகூட்டி உச்சரிக்கப் பட்டு இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவனவும் உள; அவை ஒருசார் ஆசிடை நேரிசை வெண்பா எனக்கொள்க.

(இரண்டாம் அடியில் ஒரு அசை ஆகப்பெற்று இரண்டு விகற்பங்களான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவுக்கு உதாரணம்) :–

'கருமமும் உள்படா; போகமும் துவ்வாத்;
தருமமும் தக்கார்க்கே செய்யா — ஒருநிலையே
முட்டின்றி மூன்று முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்'

(இரண்டாம் அடியில் இரு அசைகள் ஆசுபெற்று ஒரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பாவுக்கு உதாரணம்):–

'வஞ்சியேன் என்றவன்தன் ஊருரைத்தான் யானுமவன்
வஞ்சியான் என்பதனல் வாய்நேர்ந்தேன் — வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியேன் என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய்! வஞ்சியார் கோ.'

'வெண்பா அகவல் கலிப்பா அளவடி' என்னும் காரிகையுள் (உக) வெண்பா செப்பலோசையான் வரும் என்றும், ஈண்டும் 'செப்பலோசை குன்றுது' என்றும் கூறியது, கூறியது கூறிற்ருகாது.

என்னை ?,

'கூறியது கூறினும் குற்ற மில்லை
வேறொரு பொருளை விளைக்கு மாயின்'

என்றாராகலின்.

ஒருசார் பிறபாக்களைத் தத்தம் உதாரண வாய்பாட்டால் * ஓசையூட்டும் பொழுது தத்தம் ஓசையில் சிறிது வழுவி

* உதாரண வாய்பாட்டால் - தேமா, புளிமா முதலிய வற்றால்

வருவன உளவாயினும், வெண்பாவிற்குச் சிறிதும் செப்பலோசை வழுவலாகாது என்று †யாப்புறுத்தற்பொருட்டாகவும், செப்பலோசையில் சிறிது வழுவி வந்த நேரிசை இன்னிசை வெண்பாக்களை ஒருபுடை ஒப்புமை நோக்கி வெண்டுறைப் பாற்படுத்து வழங்கினும் இழுக்கா‡ தென்பது அறிவித்தற்காகவும் எனக் கொள்க.

## இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா

ஒன்றும் பலவும் விகற்பொடு
நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பி(ன்)அஃ(து) இன்னிசை
துன்னும்; அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை
யாம்;சிறை வண்டினங்கள்
துன்றும் கருமென் குழல்துடி
யேர்இடைத் தூமொழியே! (உச)

பொழிப்புரை: சிறகுகள் கொண்ட வண்டுகள் கூட்டம் மொய்க்கும் கரிய மென்மையான கூந்தலையும், அழகிய துடி போன்ற இடையினையும் உடைய தெளிவான மொழிபேசும் பெண்ணே! நேரிசை வெண்பா, தனிசொல் இல்லாமல் ஒரு விகற்பத்தால் வரினும், பல விகற்பங்களான் வரினும் இன்னிசை வெண்பா என்ற பெயர் பெறும். நான்கு அடிகட்கு மிக்கு எனைத்து அடிகளான் வரினும் அது பஃறொடை வெண்பா என்ற பெயர் பெறும்.

இருவிகற்பங்களும் பல விகற்பங்களே; ஒன்றல்லவை பல என்பது தமிழ் வழக்காதலின். இனிமை + இசை = இன்னிசை. இன்னிசை வெண்பா நெகிழ்வும் மென்மையுமுடைத்தாய் வரும்.

---

† யாப்புறுத்தல் – வலியுறுத்தல்

‡ இழுக்காது – இழுக்காகாது

பல் + தொடை = பஃறொடை. இரண்டு அடிகள் சேர்ந்தது ஒரு தொடை. இவ்வாறுன இரண்டு தொடைகட்கு மிக்க தொடைகளைக் கொண்டு வரும் வெண்பாவாதலின் இது பஃறொடை வெண்பா எனப் பெயர் பெற்றது; இரண்டல்லவை பல வென்னும் வழக்குப்பற்றியமைந்தது.

இரண்டாமடியில் தனிச்சொல் பெருது ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பாவிற்கு உதாரணம் :-

'வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்'

இரண்டாமடியில் தனிச்சொல் பெருது இரண்டு விகற்பங்களான் வந்த இன்னிசை வெண்பாவிற்கு உதாரணம் :-

'இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னுது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்
மருவுமின் மாண்டா ரறம்'

ஐந்தடியான் வந்த பஃறொடை வெண்பாவிற்கு உதாரணம் ;-

'சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்மேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல்
தோற்றம் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்
வேற்றுமை இன்றியே ஒத்தன மாவடர்
ஆற்றுக்கா லாட்டியர் கண்'

(ஆற்றுக்காலாட்டியர் – கடைசியர்)

பன்னிரண்டடிவரை வந்த பஃறொடை வெண்பாவுக்கு யாப்பருங்கல விருத்தியில் உதாரணம் காணலாம். மேலும் பலவடிகளானும் வரும்.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'துன்னும்' என்று மிகுத்துச் சொல்லிய வதனால், இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும், மூன்றுமடியின் இறுதி தனிச் சொற் பெற்று இரண்டு விகற்பத்தான் வருவனவும், பலவிகற்பாகி அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவும், பிறவாற்ருனும் நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட்டு நான்கடியான் வருவனவும் இன்னிசை வெண்பா எனப்படும்.

அவை வருமாறு :-

'அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்
திங்களுஞ் சான்ருேரு மொப்பர்மன்—திங்கள்
மறுவாற்றுஞ் சான்ரோரஃ தாற்ருர் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்".

'மலிதேரான் கச்சியும் மாகடலுந் தம்முள்
ஒலியும் பெருமையு மொக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும்.'

இவை இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"வளம்பட வேண்டாதார்—செய்தாரு மில்.'' *

இது மூன்ருமடியின் இறுதி தனிச்சொற்பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம்
பாய்மா வுடையா னுடைக்கிற்குந் தோமில்
தவக்குட்டந் தன்னுடையா னீந்தும்; அவைக்குட்டம்
கற்ருன் கடந்து விடும்.''

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை; மழையும்
தவமிலா ரில்வழி யில்லை; தவமும்
அரசிய லில்வழி இல்லை; அரசனும்
இல்வாழ்வா ரில்வழி யில்.''

---

*இச்செய்யுளை இந்நூலின் ௬௮ ஆம் பக்கத்தில் காண்க

இவை அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்று, பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

இன்னாமை வேண்டி னிரவெழுக; இந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக; தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க; வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

இஃது அடிதோறும் ஒரூஉத் தொடைபெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. பிறவும் வந்துழிக் கண்டுகொள்க.

அடிபலவாய் நிகழ்வ பஃறொடை என்னாது 'சென்று நிகழ்வ' என்று சிறப்பித்தது, செப்பாலாசையிற் சிறிது வழுவி வந்த பஃறொடை வெண்பாக்களை ஒருபுடை ஒப்புமை நோக்கி வெண்கலிப்பாற்படுத்து வழங்கினும் இழுக்காதென்பது அறிவித்தற்கெனக் கொள்க.

## சிந்தியல் வெண்பா, வெண்பாவின் இறுதியடி

நேரிசை இன்னிசை போல
நடந்(து) அடி மூன்றி(ன்) வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியல்
ஆகும்; நிகரில்வெள்ளைக்(கு)
ஓரசைச் சீரும், ஒளிசேர்
பிறப்பு(ம்) ஒண் காசு(ம்)இற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி
வாம், என்று தேறுகவே. (உரு)

பொழிப்புரை : நேரிசை வெண்பாப்போல இரண்டாம் அடியில் தனிச்சொல்பெற்று மூன்றடியான்வரின் நேரிசைச் சிந்தியல் வெண்பா என்றும், இன்னிசை வெண்பாப்போல இரண்டாமடியில் தனிச்சொல்பெறாது மூன்றடியான் வரின் இன்னிசைச் சிந்தியல் வெண்பா என்றும் பெயர் பெறும். அனைத்துவகை வெண்பாக்களும் நாள், மலர், காசு, பிறப்பு என்ற வாய்ப்பாடுகளை இறுதியாகக் கொண்ட முச்சீரடியாலேயே முடியும்.

இது மகடூஉ முன்னிலை இல்லாத காரிகை. நெடிது மல்லாது குறியது மல்லாதது சிந்து. சிந்தியல் வெண்பாக்கள் பலவிகற்பங்கள் பெறுதலுமுண்டு.

காசு, பிறப்பு என்ற ஈறு அமையப்பாடும்போது குற்றுகர ஈருக அமைத்தலே சிறப்பு. தொல்காப்பியனார் நேர்பு நிரைபு என்பவற்றை இவ்வாசிரியர் காசு பிறப்பு என்று குறிக்கிருர் என்னலாம்.

ஒரு விகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா விற்கு உதாரணம் :-

'அறிந்தானை ஏத்தி அறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செவ்வ னுரைப்ப – சிறந்தார்
சிறந்தமை ஆராய்ந்து கொண்டு'

இருவிகற்பங்களான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணம் :-

'நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும் வண்டார்ப்பப் புடைத்தாளே – பொற்றேரான்
பாலைநல் வாயில் மகள்'

ஒரு விகற்பத்தான் தனிச்சொல் இன்றிவந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணம் :—

'நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டி ரடி'

இரண்டு விகற்பங்களான் தனிச்சொல் இன்றி வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணம் :-

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

இப்பாடலுள் 'வரையனைய' என்பது ஒரூஉ எதுகையாக வந்துள்ளது. இதனைத் தனிச்சொல் என்பது பொருந்துவ தன்று.

மூன்று விகற்பங்களான் தனிச்சொல் இன்றி வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணம் :-

'முல்லை முறுவலித்துக் காட்டின மெல்லவே
சேயிதழ்க் காந்தள் துடுப்பீன்ற போயினர்
திண்டேர் வரவுரைக்கும் கார்'

இப்பாடலுள்ளும் 'மெல்லவே', 'போயினர்' என்பவை ஒரூஉ எதுகைகளே.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'நிகரில் வெள்ளைக்கு' என்று சிறப்பித்தவதனுல் குறள் வெண்பாவினை ஓரடி முக்கால் என்றும், சிந்தியல் வெண்பாவினை ஈரடி முக்கால் என்றும், நேரிசை வெண்பாவினை மூவடி முக்கால் என்றும், இன்னிசை வெண்பாவினை இன்னிசை மூவடி முக்கால் என்றும், பஃறொடை வெண்பாவினைப் பலவடி முக்கால் என்றும் பெயரிட்டு வழங்குவர் ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க.

'ஒளிசேர் பிறப்பும் ஒண்காசும்' என்று சிறப்பித்தது காசு பிறப்பு என்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈருகிய நேரீற்றியற்சீர் இறுதியாகிய முச்சீரடியானும் இறுவனவுமுள ஒரு சார் வெண்பா என்பது அறிவித்தற்கெனக் கொள்க.

வருமாறு :—

'மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொன் மடவார்க் கருளு'

இது பிறப்பென்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈருய் இற்ற (குறள்) வெண்பா.

'இனமலர்க் கோதாய் இலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு.'

இது காசு என்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈருய் இற்ற (குறள்) வெண்பா. இவை செய்யுளியலுடையார் (தொல்காப்பியர்) காட்டியவெனக்கொள்க.

'மாவாழ்சுரம் புலிவாழ்சுரம்*' என்னும் வஞ்சியுரிச்சீர் இரண்டும் உளவாகவைத்து, ஒருபயன் நோக்கித்தூஉமணி கெழூஉமணி என்றளபெடுத்து நேர்நடுவாகிய வஞ்சியுரிச் சீருக்கு உதாரணம் எடுத்துக்காட்டினர் நத்தத்தனர் முதலிய ஒருசாராசிரியர். அதுபோல இந்நூலுடையாரும் தேமா புளிமா என்னும் இரண்டு நேரீற்றியற் சீரும் உளவாக வெண்பாவின் இறுதிச்சீருக்கு உதாரண வாய்பாட்டான் ஓசையூட்டுதற் பொருட்டாகக் குற்றியலுகரம் ஈருகிய காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டான் நேரீற்றியற்சீர் ஈருக வேறு உதாரணம் எடுத்தோதினர் எனக்கொள்க.

## வெள்ளைச் செந்துறை, குறட்டாழிசை

அந்தமில் பாதம் அள(வு)இரண்(டு)
ஒத்து முடியி(ன்)வெள்ளைச்
செந்துறை ஆகும், திருவே!
அதன்பெயர்; சீர்பலவாய்
அந்தம் குறைநவும், செந்துறைப்
பாட்டின் இழிபும்அங்கேழ்ச்
சந்தம் சிதைந்த குறளும்
குறள்இனத் தாழிசையே. (உசு)

பொழிப்புரை: அழகிய பெண்ணே! இரண்டடிகளாய்த் தம்முள் அளவொத்து வருவது வெள்ளைச் செந்துறை என்று பெயர் பெறும். இரு அடிகளாய் — அவ்விரு அடிகளிலும் பல சீர்களாய் — அவற்றுள் முதலடியினும் இரண்டாமடி ஒன்றோ பலவோ சீர்கள் குறைந்ததாய் வருவதும், வெள்ளைச் செந்துறையில் குறைபாடுடையதும், செப்பலோசை கெட்ட குறட்பாவும் குறட்டாழிசை என்று பெயர் பெறும்.

'பூவெனப்படுவது தாமரையே' என்பது போல அடியெனப்படுவது அளவடியே. அந்தம் இல்பாதம் என்பது அடியின் இறுதி ஒருசீர் இல்லாதது என்னும் பொருளதாய்ச்

*இவை தேமாங்கனி, புளிமாங்கனி என்பவற்றிற்குச் சமமான வாய்பாடுகள்.

சிந்தடியைச் சுட்டும். பிறவெண்பாக்களே போல இப்பாடல் சிந்தடியான் முடிவு பெருது என்பது கருத்து.

வெள்ளைச் செந்துறை எனினும், செந்துறை வெள்ளை எனினும், வெண்செந்துறை எனினும், செந்துறைப் பாட்டு எனினும் ஒக்கும்.

தாழிசைக் குறள் எனினும், குறட்டாழிசை எனினும் ஒக்கும்.

செந்துறைப் பாட்டு வெண்பாவிற்கு இனமாதலால் வெள்ளையென்ற அடைபெற்றது. விழுமியபொருளும் ஒழுகிய ஓசையும் பெற்றுவருதலான் செந்துறை எனப்பட்டது.

துறை, தாழிசை என்பன காரணக்குறிகள். நீர்த்துறை, நீர்ப்பகுதிக்கு அழைத்துச் சேறல்போல், பாச்சுவைக்கு அழைத்துச் சேறலின் துறை யென்றும், தாழ்ந்த ஓசை பெறு தலின் தாழிசை என்றும் வழங்கப் பெறும். தாழ், தாழம் - மந்தம், கீழ்.

செந்துறைப் பாட்டும், குறட்டாழிசையும் குறட்பாவின் இனங்களெனவே இரண்டடியாகவே வரப்பெறும் எனக் கொள்க.

'சீர்பலவாய்' எனக் குறட்டாழிசைக்கு இலக்கணம் சொன்னமையால் எத்தனைச் சீர்களாலும் குறட்டாழிசை அமையலாம்.

'மாஞ்சீர் கலியுட்புகா' என்னும் ஒழிபியல் காரிகை விதிப்படி பாவினங்கட்டுச் சீர்தளைகட்குப் பாடுகள் இலவென அறிதல் வேண்டும்.

அடியெதுகை பெற்றுவந்த வெள்ளைச் செந்துறைக்கு உதாரணம்:-

'கொன்றை வேய்ந்த செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே'

அடியெதுகை பெருத வெள்ளைச் செந்துறைக்கு உதாரணம்:-

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் ருெழுக்க முடைமை'

முதலடியினும் இரண்டாமடியிற் சீர்கள் குறைந்துவந்த குறட்டாழிசைக்கு உதாரணம் :—

'நண்ணு வார்வினை நைய நாடொறும்
நற்ற வர்க்கர சாய ஞான நற்
கண்ணி னனடி யேயடை வார்கள் கற்றவரே'

இக்குறட்டாழிசையின் முதலடி எட்டுச் சீர்களைக் கொண்டதாகவும், இரண்டாமடி ஐந்து சீர்களைக் கொண்டதாகவும் வந்துள்ளது

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமற்ற செந்துறைச் சிதைவுக் குறட்டாழிசைக்கு உதாரணம்:—

'அறுவர்க் கறுவரைப் பெற்றும் கவுந்தி*
'மறு வறு பத்தினி போல்வயின் நீரே'

சந்தம் சிதைந்த (வேற்றுத்தளை விரவப்பெற்ற) குறள் குறட்டாழிசை யாயினமைக்கு உதாரணம்:—

'வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்
பண்டைய ளல்லள் படி'

இப்பாடலுள் வெண்பாவினுள் வரலாகாத கலித்தளை விரவிச் சந்தம் சிதைந்தவாறு காண்க.

## வெளிவிருத்தம், வெண்டாழிசை, வெண்டுறை

மூன்றடி யானும் முடிந்(து), அடி
தோறும் முடிவிடத்துத்
தான்தனிச் சொல்பெறும் தண்டா
விருத்தம்;வெண் தாழிசையே
மூன்றடி யாய்,வெள்ளை போன்(று)இறும்;
மூன்(று) இழி(பு) ஏழுயர்வாய்
ஆன்(று)அடி தாம்சில அந்தம்
குறைந்(து)இறும் வெண்டுறையே. (உஎ)

பொழிப்புரை: நீங்காப் பெருமை பெற்ற வெளிவிருத்தம் நான்கடியானும் மூன்றடியானும் வரும்; அடிதோறும் ஒரே

*கவுந்தி என்பது இங்குக் குந்திதேவியைக் குறிக்கும்.

தனிச்சொல்லைப் பெற்றுவரும். வெண்தாழிசை மூன்றடியான் வரும்; வெண்பாவைப்போல இறுதியடி சிந்தடியாக வரும். வெண்டுறை மூன்றடிச் சிற்றெல்லையையும் ஏழடிப் பேரெல்லையையும் பெற்று இறுதியடி முன்னைய அடிகளைக் காட்டிலும் ஒன்றோ பலவோ சீர்கள் குறைய வரும்.

இது மகடூஉமுன்னிலை இல்லாத காரிகை.

தாழிசை, துறை என்பனவற்றின் காரணங்கள் 26ஆம் காரிகை விளக்கவுரையிற் காண்க. விருத்தம் என்பது நிகழ்ச்சி கூறுவது; பிரகாசமுடையது என்பர். பெருகுவது எனினுமாம். இக்கருத்துப் பற்றியே விருத்தங்கள் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கலே சிறப்பு என ஆன்றோர் கருதுகின்றனர்.

வெளிவிருத்தம் எனினும், வெள்ளை விருத்தம் எனினும் வெண்பா விருத்தம் எனினும் ஒக்கும்.

வெண்டாழிசை எனினும், வெள்ளொத்தாழிசை எனினும் ஒக்கும்.

வெண்டுறை ஓரொலிவெண்டுறை, வேற்றொலி வெண்டுறை என இரண்டாம். அனைத்து அடிகளும் ஒருவகை ஒலியான் அமைவது ஓரொலி வெண்டுறை. பின்னைய அடிகளில் வேற்றொலி விரவ வருவது வேற்றொலி வெண்டுறை.

வெண்டுறைக்கண் முன்னைய அடிகளைக் காட்டிலும் 'இறுதியடி மட்டிலுமே சீர்கள் குறைந்து வருதல்வேண்டும்' என்ற நியதி இல்லை. பின்னைய பல அடிகளும் சீர்கள் குறைந்தனவாக வரலாம் என்பதை 'அடிதாம் சில அந்தம் குறைந்திடும்' என்ற தொடரானுணரலாம்.

மூன்றடியான் வந்த வெளிவிருத்தத்திற்கு உதாரணம்:—

'கொண்டல் முழங்கினவால் கோபம் பரந்தனவால்
— என்செய்கோயான்
வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவால்
— என்செய்கோயான்
எண்திசையும் தோகை இருந்தகவி ஏங்கினவால்
— என்செய்கோயான்'

நான்கடியான் வந்த வெளிவிருத்தத்திற்கு உதாரணம்:-

'ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார் — ஒருசாரார்
கூகூ என்றே கூவிளி கொண்டார் — ஒருசாரார்
மாமா என்றே மாய்ந்தனர் நீந்தார் — ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும் என்றார் — ஒருசாரார்'

வெண்டாழிசைக்கு உதாரணம் :—

'நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்'

மூன்றடியான் வந்த ஓரொலி வெண்டுறைக்கு உதாரணம் :—

'தாளாளர் அல்லாதார் தாம்பலர் ஆயக்கால்
என்னு(ம்.) என்னும்
ஆளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோல் சாய்ந்துவிழும் பிளிற்றி யாங்கே'

ஏழடியான் வந்த வேற்றொலி வெண்டுறைக்கு உதாரணம்:-

'முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகு
முறைசெய் கோமான் [மேவல்செய
வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன் றுக்கரிய
வைவேல் பாடிக்
கலக்கிநின் றரெலாங் கருதலா காவணம்
இலங்குவா ளிரண்டினு லிருகைவீ சிப்பெயர்ந்
தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள்
பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றரெலாம்
விலங்கியுள் ளந்தப விளிந்துவே றுபவே.'

## குணசாகரர் விளக்கவுரையிற் சில பகுதிகள்

'தண்டா விருத்தம்' என்று சிறப்பித்தவதனால் நாற்சீர் அடியுட்பட்டு அடங்காது வேறாய் வருவது ஈண்டுத் தனிச் சொல் எனக்கொள்க.

'மூன்றடி யர்ய்வெள்ளை போன்றிறுந் தாழிசை
மூன்றிழிபேழ்
ஆன்றடி தாஞ்சில வந்தத் தடிக ளவைகுறைந்து
தோன்றுந் துறைவெள்ளை தண்டாவிருத்தந்
தனிச் சொல்வந்து
மூன்றடி யானு முடியு முடியுமோர் நான்கினுமே.'

என்று வெண்பாவிற்கு இனமாகிய தாழிசை, துறை, விருத்தங்கட்கு முறையானே இலக்கணஞ் சொல்லாது தலை தடுமாற்றமாகக் காரிகை சொல்லவேண்டியது என்னையோ வெனின், ஒருசார் வேண்டுறையின் ஈற்றடி ஒன்றிருசீர் குறைந்து வருதலும் உள்ளதென்பதூஉம், வெள்ளொத் தாழிசையின் முதல் இரண்டடியும் நான்கு சீரான் வருமென்பதூஉம், சிந்தியல் வெண்பா ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருவன வெல்லாம் வெள்ளொத்தாழிசை என்று வழங்கப்படும் என்பதூஉம் அறிவித்தற்கு வேண்டப்பட்டது; 'தலை தடுமாற்றந் தந்து புணர்த்துரைத்தல்' என்பது தந்திர உத்தியாகலான்.

வெள்ளொத்தாழிசை முதலிரண்டடியும் நாற்சீராய்வரு வது 'நண்பிது' §, என்னும் இலக்கியத்துட் கண்டுகொள்க.

'அன்ன யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்.'

'ஏடி யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
நீடான் துறந்து விடல்.'

'பாவா யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்."

இவை சிந்தியல் வெண்பா ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்தமையான், வெள்ளொத்தாழிசை.

---

§, இச்செய்யுளை ருசு ஆவது பக்கத்திற் காண்க.

# 2. ஆசிரியப்பா

ஆசிரியப்பா என்னும் இப்பகுதியுள் நேரிசையாசிரியப்பா இணைக்குறள் ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா என்பவற்றிற்கும், ஆசிரியத் தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம் என்ப வற்றிற்கும் இலக்கணம் கூறப்பெறும்.

கடையயற் பாதம்முச் சீர்வரின்
நேரிசை; காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள்
எல்லா அடியு(ம்)ஒத்து
நடைபெறு மாயின் நிலைமண்
டிலம்;நடு ஆதிஅந்தத்(து)
அடைதரு பாதத்(து) அகவல்
அடிமறி மண்டிலமே. (உஅ)

பொழிப்புரை: ஈற்றயலடி முச்சீரான் வருவது நேரிசை யாசிரியப்பா. விரும்பத்தக்க முறையில் (முதலடியும் ஈற்றடியும் அளவடியாய் வர, ஏனை இடையடிகளின்) சீர்கள் இடையிடை குறைந்துவரின் இணைக்குறள் ஆசிரியப்பா. அனைத்து அடிகளும் அளவடியாகவே ஒத்துவரின் நிலை மண்டில ஆசிரியப்பா. எல்லா அடிகளும், முதலடியாகவும் இடையடியாகவும் இறுதியடியாகவும் உச்சரிக்க ஏற்ற வகையில் வரின் அடிமறிமண்டில ஆசிரியப்பா.

இது மகடூஉ முன்னிலை இல்லாத காரிகை.

## ஆசிரியப்பாவின் பொது இலக்கணம்

1. அகவலோசை கொண்டது.

2. ஆசிரிய உரிச்சீர்கள் மிகுதியாகவும் பிறசீர்கள் குறைவாகவும் வரப்பெறுவது (குற்றுகரம் வந்துழியன்றி வஞ்சியுரிச்சீர் வாரா)

3. நேரொன்ருசிரியத்தளையும், நிரையொன்ருசிரியத் தளையும் மிகுதியாகவும் பிறதளைகள் குறைவாகவும் வரப் பெறுவது.

4. அளவடியான் வருவது. (குறளடியும் சிந்தடியும் இணைக்குறளாசிரியப்பாவின் இடையிடை வரும். நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்றயலடி சிந்தடியாகவரும்.)

5. நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் (கூவிளங்கனி, கருவிளங்கனி) ஆசிரியப்பாவினுள் வாரா.

6. ஏ, ஓ, என் ஈ, ஆய், ஐ என்பவற்றுள் ஒன்றனை இறுதியிற் பெறுவது.

அகவற்பா எனினும், அரசர்பா எனினும், மென்பா எனினும், தொகை எனினும், ஆசிரியப்பா எனினும் ஒக்கும். அகவுதல்-கூவுதல். கூவியுரைத்தல் போன்று அமைத்தலின் அகவற்பா என்றும், அரசமரபைச் சேர்ந்ததாக (இரண்டா வதாகக்) கருதப்பட்டமையின் அரசர்பா என்றும், சீரும் பொருளும் இசையும் மென்மையவாதலின் மென்பா என்றும், தொகுத்துக் கூறும் சரிதகம் என்னும் உறுப்புக்கு ஏற்றதாக லின் தொகை என்றும், ஆசிரியர் உரைத்தல் போலப் பொருளைத் தெளிவுடன் உரைத்தலின் ஆசிரியப்பா என்றும் இப்பாடல் வகைக்குப் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

நேரிசை—தலைமையான ஓசை. இணைக்குறள்—இரண்டு வகைக் குறளடி, ஒன்று இருசீரடியாகிய குறளடி; மற் றொன்று அளவடியை நோக்கக் குறளான (குட்டையான) சிந்தடி. குறளடியும் சிந்தடியும் இடையிடை விரவிவருவது என்பது கருத்து. நிலைமண்டிலம் – நாற்சீரடி நின்றவாறே நிற்றல். அடிமறி மண்டிலம் – நாற்சீரடிகள் திரும்ப நிற்றல். மறிதல் – திரும்புதல். மண்டிலம் – நாற்சீரடி.

நேரிசை யாசிரியப்பா 'ஏ' என்று முடிதல் சிறப்பு; நிலை மண்டில ஆசிரியப்பா 'என்' என்று முடிதல் சிறப்பு.

அடிமறிமண்டில ஆசிரியப்பாவையும், நிலைமண்டில ஆசிரியப்பாவாக, அமைப்பளவில்கருதலாமேனும் அஃதோர்

அணிதோன்ற அமைப்பதாகவின் வேறு கூறப்பெற்றது. அடிதோறும் ஒரே ஈறும், அடிதோறும் முற்றுப் பெறும் தொடரமைப்பும் கொண்டதாக அடிமறி மண்டில ஆசிரியப் பாப் பாடலை யாத்தல் வேண்டும்.

நேரிசை யாசிரியப்பாவிற்கு உதாரணம் :—

'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே'

இணைக்குறளாசிரியப்பாவிற்கு உதாரணம் :-

'நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் திரத் தீர்பொல் லாதே'

நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கு உதாரணம் :-

'வேரல் வேலி வேர்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ(து) அறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே'

அடிமறி மண்டில ஆசிரியப்பாவிற்கு உதாரணம் :-

'சூரல் பம்மிய சிறுகான் யாரே
சூரற மகளிர் ஆரணங் கினரே
வாரலை எனிலே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே'

ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம்

கருக்கியல் தாழிசை மூன்றடி
ஒப்பன; நான்கடியாய்
எருத்தடி நைந்தும், இடைமடக்
காயும், இடையிடையே

சுருக்கடி யாயும் துறையாம்;
குறைவில்தொல் சீர்அகவல்
விருத்தம் கழிநெடில் நான்(கு)ஒத்(து)
இறுவது மெல்லியலே. (உகூ)

பொழிப்புரை: மெல்லியலே! களிப்பிணைக் கொடுக்கும் ஆசிரியத்தாழிசை அளவொத்த மூன்றடிகளைக் கொண்டது. ஆசிரியத்துறை நான்கடியாய் ஈற்றயலடி குறைந்தும் நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து இடைமடக்காயும், நான்கடியாய் இடையிடையே குறைந்தும், நான்கடியாய் இடையிடை குறைந்து இடைமடக்காயும் (இவ்வகைகளான்) வருவது. குறைவற்ற புகழ்பெற்ற தொன்மையான ஆசிரிய விருத்தம் கழிநெடிலடி நான்கு தம்முள் அளவொத்து வருவது.

ஆசிரியத்தாழிசை தனியே வருதலும், ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வருதலும் உள; பின்னையதே சிறப்புடையது. ஒருபொருள் மேல் மூன்றடுக்கலாவது, அடிப்படைக் கருத்து ஒன்றனையே மூன்று பாக்களால் விளக்குதல்.

அறுசீர் முதல் அறுபத்துநான்கு சீர் வரை ஆசிரிய விருத்தம் வருதலுண்டு. அவையாவும் சிறப்புடையனவே.

ஆசிரியத்தாழிசை தனியே வந்தமைக்கு உதாரணம் :-

'வானுற நிமிர்ந்தனை வையகம் அளந்தனை
பால்மதி விடுத்தனை பல்லுயிர் ஓம்பினை
நீணிற வண்ணநின் நிரைகழல் தொழுதனம்'

ஆசிரியத் தாழிசை ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்தமைக்கு உதாரணம் :-

'கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொன்றைஅம் தீங்குழல் கேளாமோ தோழி'

'பாம்பு கயிருக் கடல்கடைந்த் மாயவன்
ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
ஆம்ப(ல்)அம் தீங்குழல் கேளாமோ தோழி'
'கொல்லைஅம் சாரல் குருந்(து)ஒசித்த மாயவன்
எல்லிநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
முல்லைஅம் தீங்குழல் கேளாமோ தோழி'

நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து வந்த ஆசிரியத் துறைக்கு உதாரணம்:-

"கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம்முள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத் தடுபுலியே றும்மஞ்சி யகன்றுபோக
நரையுரு மேறுநுங் கைவே லஞ்சு நும்மை
வரைபர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையே"

நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து, இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறைக்கு உதாரணம்:-

"வண்டுளர் பூந்தார் வளங்கெழு
செம்பூட்சேய் வடிவே போலத்
தண்டளிர்ப்பூம் பிண்டித் தழையேந்தி
மாவினவித் தணந்தோன் யாரே
தண்டளிர்ப்பூம் பிண்டித்
தழை யேந்திவந்துநம்
பண்டைப் பதிவினவிப் பாங்குபட
மொழிந்து படர்ந்தோ னன்றே".

நான்கடியாய் இடையிடை குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரிய இணைக்குறட்டுறைக்கு உதாரணம்:-

"இரங்கு குயின்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கு மணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்
அரங்கு மணிபொழிலா ஆடுமாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த
திளவேனில்."

நான்கடியாய் முதலடியும், மூன்றாமடியும் பதினான்கு சீராய், அல்லாத அடியிரண்டும் பதினாறு சீராய் இடையிடை குறைந்து வந்த ஆசிரியத்துறைக்கு உதாரணம்:-

கொன்ருர்ந்(து) அமைந்த குறுமுகத்(து) எழில்நிறக்
குருதிக் கோட்டின் இருந்தாட் பெருங்கைக்
குன்ருமென அன்ருமெனக்
குமுரு நின்றன கொடுந்தொழில் வேழம்

வென்ருர்ந் தமைந்த விளங்கொளி யிளம்பிறைத்
துலங்குவா ளிலங்கெயிற் றழலுணேப் பருஉத்தா
ளதிரும் வானென வெதிருங் கூற்றெனச்
சுழலா நின்றன சுழிக்கண் யாளி

சென்ருர்ந் தமைந்த சிறுநுதி வள்ளுகிர்ப்
பொறியெருத் தெறுழ்வலிப் புலவுநா றழல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை

என்ருங் கிவையிவை யியங்கலி னெந்திறத்
தினிவரல் வேண்டலந் தனிவர லெனத்தலே
விலக்கவு மிருவரை மிசையெறி குறும்பிடை
யிரவிடைக் களவுளங் கற்ருயது கற்பன்றே.''

அறுசீர்க் கழிநெடிலடியான்வந்த ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணம் :-

'விடம்சூழ் அரவின் இடைநுடங்க
மின்வாள் வீசி விரையார்வேங்
கடம்சூழ் நாடன் காளிங்கன்
கதிர்வேல் பாடும் மாதங்கி
வடம்சேர் கொங்கை மலேதாம்தாம்
வடிக்கண் நீல மலர்தாம்தாம்
தடம்தோள் இரண்டும் வேய்தாம்தாம்
என்னும் தன்மைத் தண்ணுமையே'

எழுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணம் :-

'கணிகொண்ட ...... துணிவே' §

§ இச்செய்யுளே இந்நூலின் உக ஆம் பக்கத்தில் காண்க.

எண்சீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணம் :-

'மூவடிவினுல் ...... கோவே *'

ஒன்பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணம் :-

'இடங்கை ...... தவிர்க்குமே †'

பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணம் :-

'கொங்கு ...... தானே ‡'

பதின்சீரின் மிக்கசீரான் வரும் ஆசிரிய விருத்தங்கட்குத் தாயுமானவர், குமரகுருபரர், இராமலிங்கர்போன்ற ஆன்ருேரின் செய்யுட்களில் உதாரணங்கள் கண்டுகொள்க.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'தருக்கியல் தாழிசை' என்று சிறப்பித்தவதனுல், அவை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருவன சிறப்புடையன; தனியே வரப்பெறுமாயினும் எனக்கொள்க.

( ஆசிரியத்துறைக்குச் ) சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் அடியானும் வரப்பெறும். முதலயலடி குறைந்தும், நடுவீரடி குறைந்தும், மிக்கும் வருவன ஆசிரிய துறையாம். அல்லது ஓரடி குறைந்து வருவன ஆசிரிய நேர்த்துறை என்றும், ஈரடி குறைந்து வருவன ஆசிரிய இணைக்குறள்துறை என்றும் கொள்க.

# 3. கலிப்பா

கலிப்பா என்னும் இப்பகுதியுள் ஒத்தாழிசைக் கலி மூன்றற்கும், வெண்கலி இரண்டற்கும் கொச்சகக்கலி ஐந்தற்கும், கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்பவற்றிற்கும் இலக்கணங்கள் கூறப்பெறும்.

---

* இச்செய்யுளை இந்நூலின் உக ஆம் பக்கத்தில் காண்க

† இச்செய்யுளை இந்நூலின் உஉ ஆம் பக்கத்தில் காண்க

‡ இச்செய்யுளை இந்நூலின் உஉ ஆம் பக்கத்தில் காண்க

## நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா
## அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

தர(வு)ஒன்று, தாழிசை மூன்று
தனிச்சொல் சுரிதகமாய்
நிரல்ஒன்றின் நேரிசை ஒத்தா
ழிசைக்கலி; நீர்த்திரைபோல்
மர(பு)ஒன்று நேரடி, முச்சீர்,
குறள்நடு வேமடுப்பின்
அர(வு)ஒன்றும் அல்குல்!அ(து) அம்போ
தரங்கஒத் தாழிசையே. (ருo)

பொழிப்புரை: பாம்பினை ஒத்த அல்குலினைக் கொண்ட பெண்ணே! ஒரு தரவினையும், மூன்று தாழிசைகளையும், ஒரு தனிச்சொல்லையும் (ஆசிரியத்தினாலோ, வெண்பாவினாலோ ஆகிய) ஒரு சுரிதகத்தையும் வரிசையாகப்பெற்று வருவது நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும். (நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவின் உறுப்புக்களுடன்) நீரலைபோல வரவரச் சுருங்கும் இயல்பினதாகிய நாற்சீரடி, நாற்சீரோரடி, முச்சீரோரடி, இருசீரோரடி ஆகியவற்றைக் கொண்ட அம்போதரங்கம் என்ற உறுப்பை (தாழிசைகட்கும் தனிச்சொல்லுக்கும் இடையில்)பெற்றுவருவது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

### கலிப்பாவின் பொது இலக்கணம்

1. துள்ளலோசை கொண்டது.

2. புளிமாங்காய், கருவிளங்காய் எனப்படும் நிரை முதலாகிய வெண்பா உரிச்சீர் அதிகம் பெற்று வருவது.

3. தேமா, புளிமா என்னும் நேரீற்றியற்சீர்கள் வாரா,

4. கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் நிரைநடு வாகிய வஞ்சியுரிச்சீர்கள் வாரா.

5. கலித்தளை மிக்கும், அயற்றளைகள் குறைவாகவும் பெற்று வருவது.

6. அளவடியான் வருவது.

கலி – விரைவும் எழுச்சியும் பொலிவும் உடையது. அத் தன்மைகள் கொண்டமையின் கலிப்பா எனப்பெற்றது.

கலிப்பாவுக்குத் தரவு தாழிசை என்பன முதலுறுப்புக் கள். அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம்என்பன துணை உறுப்புக்கள்.

செய்திகளை முன்னுரை போலத் தந்து, முதலாவதாக அமைத்திருத்தலின் தரவு எனப் பெயர் பெற்றது. தரம் — தலை, எனப்பொருள் கொண்டு தலைமையாக இருத்தலின் தரவென்ருயிற்றென்பதும் ஒன்று. தாழிசை என்பதன் இலக்கணம் முன்னர்க் கூறப்பெற்றது.

அராகம் - கடுகிச் செல்வது; குறிலிணையாகிய நிரை யசைமிக்க சீர்களைக் கொண்டதோர் உறுப்பு. மாத்திரை நீட்டமும் துணிப்பும் அற்ற ஓசையே கடுகிய ஓசை.

அம்போதரங்கம் என்ற சொல்லுக்கு நீரினது அலை என்பது பொருள். இச்சொல்லை அம்பா + தரங்கம் என்றே பிரித்தல் வேண்டும். அம்போ – நீரினது; தரங்கம் – அலை. ஒன்றினும் ஒன்று சுருங்கியதாய சிற்றுறுப்புக்களைக் கொண் டமையின் இப்பெயர் பெற்றது. தனித்து நிற்கும் சொல் தனிச்சொல். ஒருசீர் தனிச்சொல்லாய் வரும்; ஓரசை தனிச் சொல்லாய் வருதலில்லை. சுரிதகம் என்பது 'சுவரிதகம்' எனும் வடசொல் திரிபு. அச்சொற்கு நலிந்து சரிந்தது என்பது பொருள்.

கலிப்பா ஒத்தாழிசைக்கலி, வெண்கலி, கொச்சகக்கலி எனும் முப்பிரிவுகளைக் கொண்டது. நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்பன ஒத்தாழிசைக் கலிகள். இவற்றுள் பின்னைய இரண்டும் தாம்கொண்ட சிறப்பான உறுப்பாற் பெயர்பெற்றன.

வெண்கலிப்பா கலிவெண்பா என்பன வெண்கலிகள். தரவு கொச்சகக் கலிப்பா, தரவிணைக் கொச்சகக் கலிப்பா,

சிஃறுழிசைக் கொச்சகக் கலிப்பா, பஃறுழிசைக் கொச்சகக் கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்பன கொச்சகக் கலிகள். இவை தம்பெயரானே தத்தம் இலக்கணத்தை விளக்குவன.

'தரவு மூன்றடிச் சிற்றெல்லையைக் கொண்டது; பேரெல்லை பாடுவோனது பொருள் முடிவுக் குறிப்பே. அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவுக்கும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவுக்கும் தரவு ஆறடிகளாலேயே வரும்; குறைந்தும் கூடியும் வராது. தாழிசைக்குச் சிற்றெல்லை இரண்டடி; பேரெல்லை நான்கடி. தரவைக் காட்டிலும் தாழிசையடிகள் குறைந்தே வரும்' — இக்கருத்துக்கள் ஒழிபியலுள் 'சுருங்கிற்று' என்னும் காரிகையுள் வருவன.

அராகம் நான்கடிச் சுருக்கமும் எட்டடிப் பெருக்கமும் கொண்டது. அளவடியானும் நெடிலடியானும், கழிநெடிலடியானும் வரும். ஒவ்வோரடியும் தனித்தனியே ஓரராகம் எனப்பெறும்.

நாற்சீரடிகள் இரண்டுவரப் பாடுவது பேரெண் அம்போதரங்கம். இஃது ஒரு பாடலுக்கு இரண்டு வரும். நற்சீரடி ஒன்றுவரப் பாடுவது அளவெண் அம்போதரங்கம். இஃது ஒரு பாடலுக்கு நான்குவரும். முச்சீரடி ஒன்றுவரப்பாடுவது இடையெண் அம்போதரங்கம். இஃது ஒரு பாடலுக்கு எட்டு வருவது சிறப்பு; நான்கு வருதலும் உண்டு. இருசீரடி ஒன்றுவரப்பாடுவது சிற்றெண் அம்போதரங்கம். இஃது ஒரு பாடலுக்குப் பதினாறு வருவது சிறப்பு; எட்டு வருதலும் உண்டு.

நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு உதாரணம் :-

'வாணெடுக்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து
தோணெடுந் தண்தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணெடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ.

இது தரவு

சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவால்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே.

சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே.

சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே யென்பவால்
புலம்படைந்து நலந்தொலையப் போவாரோ பொருளிலரே.

இவை மூன்றுந் தாழிசை

எனவாங்கு,

இது தனிச்சொல்

அருளேனு மிலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடு தானையிற் பொலிந்தே.'

இஃது ஆசிரியச் சுரிதகம்.

அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு உதராணம் :-

"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புன விழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்!

இது தரவு

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதொடித் திரள்திண்டோள் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ.

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்பு
மாணுதா ருடம்பொடு மறம்பிதிர வெதிர்க்கலக்கிச்
சேணுய ரிருவிசும்பிற் சேர்த்ததுநின் சினமாமோ.

படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரினொடு மருப்பொசிய வீழ்ந்துதிறல் வேருக
எருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ.

இவை மூன்றுந் தாழிசை

இலங்கொளி மகரத் தெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கையின் மாஅ னின்நிறம்;
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை.

இவை நாற்சீரீரடி இரண்டம்போதரங்கம் (பேரெண்)

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுட ருறுபகை தவிர்த்த ஆழியை;
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை;
வலிமிகு சகட மாற்றிய வடியினை;

இவை நாற்சீரோரடி நான்கம்போதரங்கம் (அளவெண்)

போரவுணர்க் கடந்தோய் நீ;
புணர்மருதம் பிளந்தோய் நீ;
நீரகல மளந்தோய் நீ;
நிழல்திகழைம் படையோய் நீ;

இவை முச்சீரோரடி நான்கம்போதரங்கம் (இடையெண்)

ஊழி நீ;
உலகு நீ;
ஆழி நீ;
அருளு நீ;
உருவு நீ;
அருவு நீ;
அறமு நீ;
மறமு நீ;

இவை இருசீரோரடி எட்டம்போதரங்கம் (சிற்றெண்)

எனவாங்கு.

இது தனிச் சொல்

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
தொடுகழற் கொடும்பூண் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
தொன்று முதிர்கட லுலகம்
ஒன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே."

இஃது ஆசிரியச் சுரிதகம்.

## குணசாகரரின் விளக்கவுரையிற் சிலபகுதிகள்

தரவு எனினும், எருத்தம் எனினும் ஒக்கும்.

தாழிசை எனினும், இடைநிலைப்பாட்டு எனினும் ஒக்கும்.

தனிச்சொல் எனினும், விட்டிசை எனினும், கூன் எனினும்*, தனிநிலை எனினும் ஒக்கும்.

அம்போதரங்கம் எனினும், அசையடி எனினும், பிரிந்திசைக் குறள் எனினும், சொற்சீரடி எனினும், எண் எனினும் ஒக்கும்.

சுரிதகம் எனினும், அடக்கியல் எனினும், வாரம் எனினும், வைப்பு எனினும், போக்கியல் எனினும் ஒக்கும்.

'மரபொன்று நேரடி' என்று சிறப்பித்தவதனால் அசையடி தான் ஈரடியால் இரண்டும், ஓரடியால் நான்கும், முச்சீரால் எட்டும், இரு சீரால் பதினறுமாய் வருவது சிறப்புடைத்து; எட்டும்பதினறும்என்று சொல்லப்பட்டன நான்கும் எட்டுமாகச் சுருங்கிவரப்பெறுமாயினும் எனக்கொள்க.

### வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலி

அசையடி முன்னர் அராகம்வந்(து)
எல்லா உறுப்பு(ம்)உண்டேல்
வசையறு வண்ணக ஒத்தா
ழிசைக்கலி; வான்தளைதட்(டு)
இசைதன(து) ஆகியும், வெண்பா
இயைந்தும்,இன் பால்மொழியாய்!
விசையறு சிந்தடி யால்இறு
மாய்விடின் வெண்கலியே (நக)

பொழிப்புரை : இனிமையான பால்போன்ற மொழியைப் பேசும் பெண்ணே ! அம்போதரங்கம் என்னும் உறுப்பிற்கு முன்னே அராகம் என்ற உறுப்பையும் பெற்று (அம்போ

---

*கூன் வேறு, தனிச்சொல் வேறு என்ற விளக்கத்தைப் 'பொருளோடு' எனத்தொடங்கும் காரிகை—எண். 43 இன் புத்துரையுட் காண்க.

தரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குள்ள) அனைத்து உறுப்புக்களையும் அம்முறையிலேயே பெற்றுவரின் அப்பாடல் குற்றமில்லா வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்ற பெயரை பெறும். கலித்தளைதட்டுக் கலியோசை தழுவி வந்து சிந்தடியான் முடிவது வெண்கலிப்பா எனப்படும். வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவி வந்து சிந்தடியான் முடிவது கலிவெண்பா எனப்படும்.

பஃறொடை வெண்பாவிற்கும் கலிவெண்பாவிற்கும் வேறுபாடு: இன்னிசை வெண்பாப் பலவடிகளான் வருவதைப் பஃறொடை வெண்பா என்றும், நேரிசை வெண்பாப் பல வடிகளான் வருவதைக் கலிவெண்பா என்றும் வழங்குதலே பொருந்துவது. குணசாகரர் கலிவெண்பாவிற்கு உதாரணமாகக் கொடுத்திருக்கும் 'சுடர்தொடீஇ கேளாய்' எனவரும் பாடல் பஃறொடை வெண்பாவேயாகும்.

'ஒருபொருள் நுதலிய வெள்ளடியாற் கலிவெண்பா அமையும்' என்பர் தொல்காப்பியனார். 'வெண்கலிப்பா எனினும், கலிவெண்பா எனினும் ஒக்கும்' என்கிறார் யாப்பருங்கல விருத்தியுரைகாரர்.

வெண்கலிப்பாவுள் பிறதளைகள் மயங்குவனவே பெரும்பான்மை.

வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு உதாரணம்:—

விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துகதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்காற் றுறுமுமலர் நறும்பைந்தார்ப்
பருஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின்
மிசைத்தோன்றுங்
குருஉக்கொண்ட மணிப்பூணேய் குறையிரந்து
முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கும் அல்லார்க்கும்
தாயாகித் தலையளிக்கும் தண்டுறை யூரகேள்;

இது தரவு

காட்சியால் கலப்பெய்தி யெத்திறத்தும் கதிர்ப்பாகி
மாட்சியால் திரியாத மரபொத்தாய் கரவினால்

பிணிநலம் பெரிதெய்திப் பெருந்தடத்தோள் வனப்பழிய
அணிநலந் தனியேவந் தருளுவதும் அருளாமோ;
அன்பினு லமிழ்தளைஇ அறிவினுற் பிறிதின்றிப்
பொன்புனை பூணுகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ;
பாங்களையே வாயிலாப் பல்காலும் வந்தொழுகுந்
தேங்காத கரவினையுந் தெரியாத விருளுடைக்கண்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியையாய்த்
தடமலர்த்தார் அருளுநின் தகுதியுந் தகுதியோ;
இவைமூன்றும் தாழிசை

தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவனபொழில்
போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு
கருநெய்தல் விரிவன கழி
தீதுறு திறமறு கெனநனி முனிவன
துணையொடு பிணவன துறை
மூதறு மொலிகலி நுரைதரு திரையொடு
கழிதொடர் புடையது கடல்

இவை நான்கும் அராகம்

கொடுந்திற லுடையன சுறவேறு கொட்பதனுல்
இடுங்கழி யிராவருதல் வேண்டாவென் றிசைத்திலமோ;
கருநிறத் தடுதொழிற் கராம்பெரி துடைமையால்
இருணிறத் தொருகான லிராவார லென்றிலமோ;
இவை நாற்சீர் ஈரடி யிரண்டம்போதரங்கம் (பேரெண்)

நாளொடு கழிந்தன்ருற் பெண்ணரசி நலத்தகையே;
துஞ்சலு மொழிந்தன்ருற் றொடித்தோளி தடங்கண்ணே;
அரற்றொடு கழிந்தன்ரு லாரிருளு மாயிழைக்கே;
நயப்பொடு கழிந்தன்ரு னனவதுவு நன்னுதற்கே;
இவை நாற்சீர்ஓரடி நான்கம்போதரங்கம் (அளவெண்)

அத்திறத்தா லிசைந்தன தோள்;
அலர்தற்கு மெலிந்தன கண்;
பொய்த்துரையாற் புலர்ந்தது முகம்;
பொன்னிறத்தாற் போர்த்தன முலை;
அழலினு லசைந்தது நகை;
அணியினு லொசிந்த திடை;
குழலினு லவிர்ந்தது முடி;
குறையினுற் கோடிற்று நிரை;

இவை முச்சீர் ஓரடியெட்டம்போதரங்கம் (இடையெண்)

உட்கொண்ட தகைத்தொருபால்;
உலகறிந்த வலத்தொருபால்;
கட்கொண்டல் துளித்தொருபால்;
கழிவெய்தும் படித்தொருபால்;
பரிவுறூஉந் தகைத்தொருபால்;
படர்வுறூஉம் பசப்பொருபால்;
இரவுறூஉந் துயரொருபால்;
இளிவந்த எழிற்றொருபால்;
மெலிவுறூஉந் தகைத்தொருபால்;
விளர்ப்புவந் தடைந்தொருபால்;
பொலிவுசென் றகன்றொருபால்;
பொறைவந்து கூர்ந்தொருபால்;
காதலிற் கதிர்ப்பொருபால்;
கட்படாத் துயரொருபால்;
ஏதில்சென் றணைந்தொருபால்;
இயல்நாணிற் செறிவொருபால்;

இவை இருசீர் ஓரடிப் பதினறம்போதரங்கம் (சிற்றெண்)

எனவாங்கு,

இது தனிச்சொல்.

இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவணலம்
என்னவு முன்னுட் டுன்னு யாகிக்
கலந்த வண்மையை யாயினு நலந்தகக்

கிளையொடு கெழீஇத் தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே

இஃது ஆசிரியச் சுரிதகம்.

வெண்கலிப்பாவிற்கு உதாரணம்:—

வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்தச்
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையான்
மனையறமுந் துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த
தொன்மைசால் மிகுகுணத்தெந் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு.

இப்பாடல் வெண்சீர் வெண்டளைகளும், கலித்தளைகளு மாக அமைந்துள்ளது.

## குணசாகரர் விளக்கவுரையிற் சில பகுதிகள்

அராகம் எனினும், வண்ணகம் எனினும், முடுகியல் எனினும், அடுக்கியல் எனினும் ஒக்கும்.

'வசையறு வண்ணகம்' என்று சிறப்பித்தவதனுல் அராக வுறுப்புத்தான் அளவடிமுதலாய எல்லாவடியானும் வரப் பெறும் எனக்கொள்க.

(அராகத்திற்கு) அடிவரையறையாவது, சிறுமை நான்கடி, பெருமை எட்டடி. இடை ஐந்தடியானும், ஆறடி யானும், ஏழடியானும் வரப்பெறும் எனக்கொள்க.

## கொச்சகக் கலிப்பாக்கள்

தரவே தரவிணை தாழிசை
தாமும் சிலபலவாய்
மரபே இயன்று மயங்கியும்
வந்தன, வாங்கமைதோள்

அரவேர் அகலல்குல் அம்(பு)ஏர்
நெடுங்கண்வம் பேறுகொங்கைக்
குரவே கமழ்குழ லாய்!கொண்ட
வான்பெயர் கொச்சகமே. (௩௨)

பொழிப்புரை: மூங்கிலை ஒத்த திரண்ட தோள்களையும், பாம்பை ஒத்த அகன்ற அல்குலினையும், அம்பை ஒத்த நீண்ட கண்களையும், கச்சுக் கட்டிய கொங்கைகளையும், குராஅ மலர் மணம் வீசும் குழலினையும் கொண்ட பெண்ணே! உயர்ந்த சிறப்புற்ற கொச்சகக் கலிப்பாக்க ளாவன (வருமாறு):— ஒரு தரவினை மட்டும் பெற்றுவருவது தரவு கொச்சகக் கலிப்பா. இரண்டு தரவுகளைப் பெற்று வருவது தரவிணைக் கொச்சகக் கலிப்பா. சில தாழிசைகளை (இரண்டு முறை தாழிசைகளை) ஏற்றுவருவது சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா. பல தாழிசைகளை (இரண்டுக்கு மேற் பட்ட முறை தாழிசைகளை) ஏற்றுவருவது பஃறாழிசைக் கொச் சகக் கலிப்பா. கலிப்பாவின் உறுப்புகளும் வெண்பா ஆசிரி யம் என்ற பிறவும் மயங்க வருவது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

கொச்சகம், கொய்சகம் என்பதன் திரிபு. கொச்சகம் - சேலையின் தலைப்புப்பகுதி. மகளிர் தம் உடையைக் கொசுவி அணிந்து கொள்வது போறலின் இஃதும் அப்பெயர் பெற்றது.

கொச்சகக் கலிப்பாக்களுள் தனிச்சொல், சுரிதகம் ஆகிய உறுப்புக்கள் வருவதற்கு வரையறை இல்லை. அவை ஒரு பாடலுள் பலமுறை வரலாம்.

சில + தாழிசை = சிஃறாழிசை. பல + தழிசை = பஃறாழிசை.

கொச்சக ஒருபோகு என்று தொல்காப்பியனார் இவ் வகை அனைத்தையும் குறிக்கிறார். மயேச்சரரும் இவற்றைக் கொச்சக ஒருபோகு என்றே குறித்தனர் என்பர்.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாத் தம்முண் மயங்குதலாவது கலிப்பாவின் உறுப்புக்கள் மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும் மயங்குதல். பிறவற்றுடன் மயங்குதலாவது வெண்பாவுடனும் ஆசிரியத்துடனும் மயங்குதல். கலியினுள் வாராவெனப்பட்ட நேரீற்று இயற்சீரும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் ஐஞ்சீரடியும் வர மயங்குதலும், பிறவற்றுடன் மயங்குதலேயாம்.

தரவு கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்:-

செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.

தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வந்த தரவு கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்:-

குடநிலைத் தண்புறவிற் கோவல ரெடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவிற் றகையேறு மரம்பாய்ந்து
வீங்குமணிக் கயிறுரீஇத் தாங்குவனத் தேறப்போய்க்
கலையினெடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப
இது தரவு

எனவாங்கு,
இது தனிச்சொல்

ஆனெடு புல்லிப் பெரும்புதன் முனையுங்
கானுடைத் தவர்தேர் சென்றவாறே.''
இஃது ஆசிரியச்சரிதகம்.

தரவிணைக் கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்:-

"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனாய்
கொடிபடு மணிமாடக் கூடலார் கோமானே;
இது தரவு

எனவாங்கு,
இது தனிச்சொல்.

துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந்
துறப்புண்டாங்
கிணைமலர்த்தா ரருளுமே லிதுவிதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரோ;

இது தரவு

அதனால்,

இது தனிச்சொல்

செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா ருங்கொலிஃ தெண்ணிய வாறே.''

இஃது ஆசிரியச் சுரிதகம்.

சிஃறுழிசைக் கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்:-

''பருஉத்தடக்கை மதயானைப்
பணையெருத்தின் மிசைத்தோன்றிக்
குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க்
குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் தேரினொடும்
பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான்
கூடலார் கோமானே;

இது தரவு

ஆங்கொருசார்,

இது தனிச்சொல்

உச்சியார்க் கிறைவனா யுலகமெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனாப் பாவித்தார்
வச்சிரங் காணாத காரணத்தான் மயங்கினரே;

ஆங்கொருசார்,*

அக்கால மணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தாய்
சக்கரங் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே;

ஆங்கொருசார்,*

---

*இக்குறியிட்டன தாழிசைகட்கு இடையில் வந்த தனிச்சொற்கள்.

மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து
மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனுப் பாவித்தார்;
வேல்கொண்டது இன்மையால் விம்மிதராய் நின்றனரே;
இவை மூன்றும் தாழிசை

அஃதான்று

இது தனிச்சொல்

கொடித்தேர்த் தோன்றல் கொற்கைக் கோமான்
நின்றபுக ழொருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி யறிந்தனர் பலரே தானும்
ஐவரு ளொருவனென் றறிய லாகா
மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே.''
இது சுரிதகம்.

பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்:-

"தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியு முடைநிறையு முடன்தளர முன்னாட்கட்
கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையை
நிறைகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ;
இது தரவு

இளநல மிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ;
தகைநல மிவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநல மிவள் வாடி வருந்தியில் லிருப்பாளோ;
அணிநல மிவள்வாட அரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசோடு மடிவாளோ;
நாம்பிரியே மினியென்று நறுநுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியோ மெனவுரைத்த உயர்மொழியும் பழுதாமோ;
குன்றளித்த திரடோளாய் கொய்புனத்திற் கூடியநாள்
அன்றளித்த அருண்மொழியால் அருளியதும் பழுதாமோ

சில்பகலு மூடியக்காற் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலுந் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ;
இவை யாறுந் தாழிசை
எனவாங்கு
இது தனிச்சொல்
அரும்பெற லமிழ்தினுந் தரும்பொரு ளதனினும்
பெரும்பெற லரிதிவள் வெறுக்கையு மற்றே;
அதனால்
விழுமிய தறிமதி வாழி
கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே.''
இஃது ஆசிரியச் சுரிதகம்.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவிற்கு உதாரணம்;–
''மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறையன்னம்
இரைநயந் திறைகூரு மேமஞ்சால் துறைவகேள்;
மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி யிறக்கலா
தெழுமுந்நீர் பரந்தொழுகு மேமஞ்சால் துறைவகேள்;
இவை இரண்டுந் தரவு
கொடிபுரையு நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோள்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டுந் துறவலனே யென்றியால்
கண்கவரு மணிப்பைம்பூட் கயில்கவைஇய சிறுபுறத்தோள்
தெண்பனிநீ ருகக்கண்டுந் திரியலனே யென்றியால்;
நீர்பூத்த நிறையிதழ்க்க ணின்றெசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே யென்றியால்;
சுனைவரல்யாற் றிடுகரைபோற் கைந்நில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் னிலைகண்டும் நீங்கலனே யென்றியால்;

வீழ்சுடரி னெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லா
தாழுமென் னிலைகண்டு மகல்கிலனே யென்றியால்;

கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்;

இவை யாறுந் தாழிசை

அதனால்,

இது தனிச்சொல்

அடும்பம விறும்பி னெடும்பனை மிசைதொறுங்
கொடும்புற மடலிடை யொடுங்கின குருகு;
செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர்
நெறிதரு புரவியின் மறிதருந் திமில்;
அரசுடை நிரைபடை விரைசெறி முரைசென
நுரைவரு திரையொடு கரைபொருங் கடல்;
அலங்கொளி யவிர்சுட ரிலங்கெழின் மலர்தொறுங்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்;

இவை நான்கும் அராகம்

விடாஅது கழலுமென் வெள்வளையுந் தவிர்ப்பாய்மன்
கெடாஅது பெருகுமென் கேண்மையு நிறுப்பாயோ;

ஒல்லாது கழலுமென் னொளிவளையுஞ் செறிப்பாய்மன்
நில்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ;

தாங்காது கழலுமென் றகைவளையுந் தவிர்ப்பாய்மன்
நீங்காது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ;

மறவாத அன்பினேன் மனனிற்கு மாறுரையாய்
துறவாத தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்;

காதலார் மார்பன்றிக் காமக்கு மருந்துரையாய்
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய்;

இணைபிரிந்தார் மார்பன்றி யின்பக்கு மருந்துரையாய்;
துணைபிரிந்த தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்;

இவை யாறுந் தாழிசை

எனவாங்கு,

இது தனிச்சொல்

| | |
|---|---|
| பகைபோன்றது துறை; | தகையிழந்தன தோள்; |
| பரிவாயின குறி; | தலைசிறந்தது துயர்; |
| நகையிழந்தது முகம்; | புகைபரந்தது மெய்; |
| நனி நாணிற் றுளம்; | பொறையாயிற் றுயிர்; |

இவை இருசீரோரடி எட்டம் போதரங்கம்

அதனால்,

இது தனிச்சொல்

இணையது நிலையா லணையது பொழுதால்
நிணையல் வாழி தோழி துணைவரற்
பனியொடு கழிக உண்கண்
என்னொடு கழிகவித் துன்னிய நோயே.

இஃது ஆசிரியச் சுரிதகம்.

## குணசாகரர் விளக்கவுரையிற் சிலபகுதிகள்

'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்பது தந்திரவுத்தியாகலின் தரவு கொச்சகம் முதலியன அவ்வப் பெயரானே வழங்கப்படும் எனக்கொள்க.

'தாமும்' என்று மிகுத்துச் சொல்லியவதனால் தனிச் சொல்லும், சுரிதகமும் இடையிடை வரப்பெறும் எனக் கொள்க.

'மரபே இயன்றும்' என்று சிறப்பித்தவதனால் வரலாற்று முறையோடும் கூட்டிக் கலியுறுப்பில் மிக்கும், குறைந்தும் பிறழ்ந்தும், உறழ்ந்தும், மயங்கியும், கலியுள் வாரா என்ற நேரீற்று இயற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும், ஐஞ்சீரடியும் வந்து, ஒத்தாழிசைக் கலிப்பாக்களோடு ஒவ்வாது வருவன எல்லாம் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்று வழங்கப்படும் எனக்கொள்க.

இன்னும் 'மரபே இயன்றும்' என்று சிறப்பித்தவதனால் ஒருபோகு முதலா உடையனவற்றையெல்லாம் இதனால் பெயர் கொடுத்துக் கொச்சகம் என்று வழங்கப்படும எனக் கொள்க.

## கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம்

அடிவரை இன்றி அளவொத்தும்
அந்தடி நீண்(டு)இசைப்பின்
கடிதல்இல் லாக்கலித் தாழிசை
யாகும்; கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது ;
நேரடி ஈரிரண்டாய்
விடின்,அது வாகும் விருத்தம்;
திருத்தகு மெல்லியலே ! ௩௩

பொழிப்புரை: திருமகளை ஒத்தபெண்ணே ! அடிவரையறை இல்லாமல் ஈற்றடி நீங்கலாக ஏனைய அடிகள் அளவு ஒத்தும், ஒவ்வாதும் வந்து, மற்றைய அடிகளைக் காட்டிலும் ஈற்றடி ஒன்றோ பலவோ சீர்மிகப் பெற்று வருவது கலித்தாழிசை. ஐஞ்சீரடி நான்காய் அளவொத்து வருவது கலித்துறை. நாற்சீரடி நான்காய் அளவொத்து வருவது கலிவிருத்தம்.

ஈண்டும், தாழிசை ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருதலே சிறப்புடைத்து. கலித்தாழிசைக்குச் சீர் வரையறையும் அடிவரையறையும் இல்லை. கலித்துறை, கலிவிருத்தங்கள் பல்வேறுபட்ட சந்த ஓசைகளைக் கொண்டெழுத ஏற்ற பாக்களாகும்.

ஒரு பொருள்மேல் முன்றடுக்கிவந்த கலித்தாழிசைக்கு உதாரணம்:–

'கொய்தினை காத்தும் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்'
'ஆய்தினை காத்தும் அருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்'
'மென்தினை காத்தும் மிகுபூங் கமழ்சோலை
குன்றச் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்'

ஈற்றடி நீங்கலாக ஏனைய அடிகள் அளவொத்து வந்த கலித்தாழிசைக்கு உதாரணம்:-

'வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறியெம்
கேள்வரும் போழ்தில் எழால்வாழி வெண்திங்காள்
கேள்வரும் போழ்தில் எழாலாய்க் . குருலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்திங்காள்'

'அளவொத்தும்' என்ற உம்மையான் ஈற்றடி நீங்கலாக ஏனைய அடிகள் அளவு ஒவ்வாது வந்த கலித்தாழிசைக்கு உதாரணம்:-

'பூண்ட பறையறையப் பூதம் மருள
நீண்ட சடையான் ஆடுமே
நீண்ட சடையான் ஆடு மென்ப
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே *'

கலித்துறைக்கு உதாரணம்:-

'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரியன்றே'

கலிவிருத்தத்திற்கு உதாரணம்:-

'வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்
ஆய்தலின் ஒண்சுடர் ஆழியி னுன்தமர்
வாய்தலின் நின்றனர் வந்தென மன்னர்முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்'

## கட்டளைக் கலித்துறை

அமித சாகரர் கட்டளைக் கலித்துறைக்கு இந்நூலுள் யாண்டும் இலக்கணம் கூறவில்லை, எடுத்த மொழியின் எய்த வைத்தல் என்பது தந்திரவுத்தியாகலான் இவ்வாசிரியர் யாப்பிலக்கணம் கூறிய நாற்பத்துநான்கு காரிகைகளும்

---

* இது முதலடியும் மூன்றுமடியும் அளவடியா எனும், ஈற்றடி நெடிலடியானும் வந்தமை கண்டுகொள்க.

இவ்வகைப் பாக்களாலேயே ஆகலின் இதன் இலக்கணம் வேறு கூறவேண்டாவாயிற்று. இவ்விலக்கியங்களால் இதன் இலக்கணம் மாணுக்கர் உணர்வர் என்பது ஆசிரியர் துணிபாதல் வேண்டும்.

கோவைக் கலித்துறை எனினும், திலகக் கலித்துறை எனினும், திருவிருத்தம் எனினும், கட்டளைக் கலித்துறை எனினும் ஒக்கும்.

## கட்டளைக் கலித்துறையின் இலக்கணம்

1 ஐஞ்சீரடியாக வரும்

2 முதல் நான்கு சீர்களும் வெண்சீர், இயற்சீர் வெண்டளைகளான் வரும்

3 ஐந்தாம் சீர் விளங்காய்ச் சீராக வரும்

4 நேர் தொடக்கமாயின் ஓரடிக்குப் பதினாறு எழுத்துக்களையும், நிரை தொடக்கமான பாடலாயின் ஓரடிக்குப் பதினேழு எழுத்துக்களையும் கொண்டுவரும்.

5 ஓர் அடியின் இறுதிச் சீருக்கும் மறு அடியின் முதற்சீருக்கும் இடையில் தளைகாணல் வேண்டா.

# வஞ்சிப்பா

வஞ்சிப்பா என்னும் இப்பகுதியுள், குறளடி வஞ்சிப்பா சிந்தடி வஞ்சிப்பா, வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம் ஆகிய பாடல்களுக்கு இலக்கணம் கூறப்பெறும்.

குறளடி நான்கின முன்(று)ஒரு
தாழிசை; கோதில்வஞ்சித்
துறைஒரு வாது தனிவரு
மாய்விடின்; சிந்தடிநான்(கு)
அறைதரு காலை, அமுதே!
விருத்தம்; தனிச்சொல்வந்து
மறைதல்இல் வாரத்தி னல்இறும்
வஞ்சி;வஞ் சிக்கொடியே! ௩௪

பொழிப்புரை: வஞ்சிக்கொடிபோன்ற பெண்ணே! குறளடி நான்கு ஒரு பாடலாகவந்து, அஃது ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருமானால் வஞ்சித்தாழிசை எனப்பெறும். அக்குறளடி நான்கு ஒரு பொருண்மேல் மூன்றடுக்காமல் தனித்துவரின் வஞ்சிதுறை எனப்பெறும். சிந்தடி நான்கு சிறப்பித்துச் சொல்லும் வஞ்சிவிருத்தம் எனப்பெறும். தனிச்சொல்பெற்று அழிவுபடாத ஆசிரியச் சுரிதகத்தினால் முடிவு பெறுவது வஞ்சிப்பா எனப்பெறும்.

குறளடியான் நடைபெற்றுத் தனிச் சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்று முடிவது குறளடி வஞ்சிப்பா. சிந்தடிகளின் நடைபெற்றுத் தனிச் சொல்லும் ஆசிரியச் சுரிதகமும்பெற்று முடிவது சிந்தடி வஞ்சிப்பா.

## வஞ்சிப்பாவின் பொதுவிலக்கணம்

1 தூங்கலோசை கொண்டது

2 கனிச்சீர்களை அதிகமாகவும், பிறசீர்களைக் குறைவாகவும் பெற்று வருவது.

3 ஒன்றிய வஞ்சித்தளையையும், ஒன்றாத வஞ்சித்தளையையும் அதிகமாகப்பெற்றுப் பிறதளைகளைக் குறைவாகப் பெற்று வருவது

4 குறளடியானும் சிந்தடியானும் வருவது

5 தனிச்சொல் பெற்று ஆசிரியச்சுரிதகத்தால் முடிவு பெறுவது; (வெண்பாச் சுரிதகம் பெறாது.)

6 புறநிலை வாழ்த்து முதலிய பொருள்களிற் பாட ஏற்றதன்று.

புறநிலை வாழ்த்து முதலியஉயரிய கருத்துக்கள்கொண்டதாக இப்பாடலை அமைக்கலாகாதெனவே இப்பெயர் பெற்றதென்பார் வஞ்சமுடைய பா வஞ்சிப்பா என்பர். ஏனைய மூன்று பாக்களும் ஏற்கும் அளவடி இப்பாவுக்கு இன்மையின் இப்பெயர் பெற்றதென்பார் வஞ்சிக்கப் படுதலின் வஞ்சிப்பா என்பர். பலவகையான பிரிவுப் பாடல்களைக் கொள்ளாமல்மென்

மைத் தன்மை கொண்டபாடல் எனக்கூறி உவமையாகு பெயராகப் பெற்ற பெயரென்பார், வஞ்சிக்கொடியின் பெயர் இப்பாடலுக்கு ஆகிவந்தது என்பர்.

குறளடி வஞ்சிப்பாவிற்கு உதாரணம் :-

'பார்பரவிய பருவரைத்தாய்க்
கார்கவினிய கதழொளியாய்
நீர்மல்கிய நீண்மலரவாய்த்
திறமல்கிய தேனினமுமாய்
அதனால்
மொய்ம்மலர் துவன்றிய தேம்பாய்
மலரடி இணையை வைத்தவா மனனே'

சிந்தடி வஞ்சிப்பாவிற்கு உதாரணம் :-

"கொடியவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தின் இணையரிமா னணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயினடுவண் இனிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை பத்தியலாற் செப்பினோன்
புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறு நாற்கதி வீடுநனி யெளிதே"

வஞ்சித்தாழிசைக்கு உதாரணம்:-

"மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயின்மறைக்கும்
இடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்"

"பேடையை யிரும்போத்துத்
தோகையான் வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்."

"இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையான் வெயின் மறைக்கும்
அருஞ்சுர மிறந்தோர்க்கே
விரும்புமென் மனனேகாண்."

வஞ்சித்துறைக்கு உதாரணம்:-

"மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்"

வஞ்சி விருத்தத்திற்கு உதாரணம்:-

"சோலை யார்ந்த சுரத்திடைக்
காலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்கண்இவள் வாழுமே"

## 5. மருட்பா

மருட்பா என்னும் இப்பகுதியுள் சமநிலை, வியநிலை என்னும் இருவகையுள் வரும் புறநிலை வாழ்த்து மருட்பா, கைக்கிளை மருட்பா, வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா ஆகிய பாடல்கட்கு இலக்கணம் கூறப் பெறும்.

பண்பார் புறநிலை; பாங்குடைக்
கைக்கிளை வாயுறைவாழ்த்(து)
ஒண்பாச் செவியறி(வு) என்(று)இப்
பொருள்மிசை, ஊனமில்லா
வெண்பா முதல்வந்(து) அகவல்பின்
ஆக விளையுமென்றால்
வண்பால் மொழிமட வாய்!மருட்
பாஎனும் வையகமே நரு

பொழிப்புரை: சுவையான பால்போன்ற மொழிபேசும் மடப்பம் பொருத்திய பெண்ணே! பண்பு பொருந்திய புறநிலைவாழ்த்து என்ற பொருளின் மேலும், சிறப்புடைய கைக்கிளை என்ற பொருளின் மேலும், வாயுறை வாழ்த்து என்ற பொருளின் மேலும், புகழ்பொருந்திய செவியறிவுறூஉ என்ற பொருள் மேலும், குறைதலில்லா வெண்பா முதலிலேயும் அகவற்பா பின்னேயும் அமையப் பாடப்படுமானால் அப் பாடல் மருட்பா என உலகத்தாரால் அழைக்கப்படும்.

மருள் - மயக்கம். பார்ப்பன இளைஞனும் அரசகுலக் கன்னியும் கலந்ததைப்போல வெண்பாவும் ஆசிரியமும் விரவியமையின் மருட்பா எனப்பெயர் பெற்றது. கங்கையும் யமுனையும் சங்கமித்தது போல அப்பெயர் பெற்றதென் பாரும் உளர். அதனைப் பின்னர் பிரித்து வேறுபாடு காண வியலாது. இஃது அன்னதன்றாகலான் அவ்வுவமை பொருந்தாது.

வெண்பாவின் அடிகளும் ஆசிரியப்பாவின் அடிகளும் சமமாக அமையின் சமநிலை மருட்பா எனப்படும். மருட்பாவில் ஆசிரியம் இரண்டடிகளாலேயே நடைபெறும். இவ்வாற்றான் சமநிலை மருட்பா நான்கு அடிகளே பெறும். வெண்பாவின் அடி ஆசிரியத்தின் அடியினும் மிக்குவரின் வியநிலை மருட்பா எனப்படும். வியம் – விஷமம்; ஏற்றத்தாழ்வு

புறநிலை வாழ்த்து: வாழ்த்தத்தக்க ஒருவனை முன்னிலைப் படுத்தி 'உன்னுடைய வழிபடுகடவுள் உன்னைக் காக்க அறவழியில் ஈட்டிய செல்வத்துடன் பழிக்கு அஞ்சி வழிவழி சிறந்து வாழ்க!' என வாழ்த்துவது.

கைக்கிளை: கை – சிறுமை; கிளை – உறவு; ஒரு பாற் காமம் சிறுமை உறவே. இஃது ஒத்தகாமத்தின் தொடக்க நிலை. அஃதாவது இயற்கைப் புணர்ச்சியின் காட்சி முதல் குறிப்பறிதல் வரை கைக்கிளையே.

வாயுறை வாழ்த்து: வாய் - உண்மை; உறை – உறுத்துவது. வேம்புபோன்ற சொற்களான் அமையினும் பின்னர்ப் பயன் தரக்கூடியவாய மெய்ப்பொருள் கூறி வாழ்த்துவது.

செவியறிவுறூஉ: செவி – காதில்; அறிவுறூஉ – அறிவுறுத்துவது. முன்னோர், மூத்தோர், அறவோர், வழிப் பொங்குதலின்றி வாழ்தல் வேண்டுமென அறிவுறுத்துவது. பொங்குதல் – சினத்தல்.

புறநிலை வாழ்த்து மருட்பாவிற்கு உதாரணம் :–

‘தென்றல் இடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றான் நிற்காப்ப - என்றும்
தீரா நண்பின் தேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே’

கைக்கிளை மருட்பாவிற்கு உதாரணம்:–

‘திருநுதல் வேரரும்பும் தேங்கோதை வாடும்
இருநிலம் சேவடியும் தோயும் - அரிபரந்த
போகிதழ் உண்கணும் இமைக்கும்
ஆகும் மற்றிவள் அகலிடத் தணங்கே’

வாயுறை வாழ்த்து மருட்பாவிற்கு உதாரணம்:–

‘பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின்
சொலல் முறைக்கண் தோன்றிச்சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையின் ஆண்ட நிகரில்லார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்கள் நில்லா
இலங்கும் எறிபடையும் ஆற்றலும் அன்பும்
கலந்ததம் கல்வியும் தோற்றமும் ஏனைப்
பொலன்செய் புனைகலனோ டிவ்வாற னாலும்
விலங்கிவரும் கூற்றை விலக்கலும் ஆகா
தனைத்தாதல் நீயிருங் காண்டிர்—நினைத்தக்க
கூறிய வெம்மொழி பிழையாது
தேறிநீ ரொழுகின் சென்று பயன் தருமே’

செவியறிவுறூஉ மருட்பாவிற்கு உதாரணம் :–

‘பல்யானை மன்னர் முருங்க அமருழந்து
கொல்யானைத் தேரோடுங் கோட்டத்து — நல்ல

தலையாலங் கானம் பொலியத் — தொலையாப்
படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக — அடுதிறல்
ஆளி நிமிர்தோட் பெருவழுதி யெஞ்ஞான்றும்
ஈரமுடையாய் என்வாய்ச்சொற் கேட்டி
உரிய உழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருகா லுழவர்க்கு வேளாண்மை செய்யல்
மழவ ரிழைக்கும் வரைக்காண் நிதியீட்டங்
காட்டும் அமைச்சரை யாற்றத் தெளியல்
அடைத்த வரும்பொரு ளாறன்றி வௌவல்
இனத்தைப் பெரும்பொரு ளாசையி னுற்சென்று
மன்ற மறுக அகழாதி — என்றும்
மறப்புற மாக மதுரையா ரோம்பும்
அறப்புறம் ஆசைப்பட்டேற்க — அறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி — நவையாக
நட்டார் குழிசி சிதையாதி — ஒட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் — கவிபடைத்தாய்
கற்ருர்க் கினனுகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்ருர்ச் செறுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
அற்றம் அறிந்த அறிவினுய் — மற்றும்
இவையிவை வீயா தொழுகின் நிலையாப்
பொருகட லாடை நிலமகள்
ஒருகுடை நீழல் துஞ்சுவண் மன்னே.'

## குணசாகரர் விளக்கவுரையிற் சில பகுதிகள்

'பண்பார் புறநிலை' என்றும்; 'ஒண்பாச் செவியறிவு' என்றுஞ் சிறப்பித்தவதனுல், புறநிலைவாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், செவியறிவுறூஉவும் இவ்வாறன்றி வெண்பாவே யாயும், ஆசிரியமேயாயும் வரப்பெறும்; கலியும் வஞ்சியு மாய் வரப்பெரு எனக் கொள்க.

என்னை,

> 'கலி நிலை வகையும் வஞ்சியும் பெருஅ
> வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
> செவியறி வுறூஉவும் என் றவையு மன்ன.'

என்றாராகலின்.

'பாங்குடைக் கைக்கிளை' என்று சிறப்பித்தவதனால் கைக்கிளை எல்லாப்பாவாலும் வரப்பெறும்; மருட்பாவே யாய் வருகவென்னும் யாப்புறவில்லை என்றும், கைக்கிளை வெண்பா முதலாக ஆசிரியம் ஈருக வரும்வழி ஆசிரியவடி இரண்டேயாய் அவற்றுள், ஈற்றயலடி முச்சீராய் வரும் என்றும், வெண்பாவடியும், ஆசிரியவடியும் ஒத்துவருவன சமநிலைமருட்பா என்றும், ஒவ்வாதன வியநிலைமருட்பா என்றும் வழங்கப்படும் என்றுங் கொள்க. 'ஊனமில்லா வெண்பா' என்று சிறப்பித்தது வேற்று வண்ணம் விரவாது வெள்ளை வண்ணம் எல்லா வண்ணத்துள்ளுஞ் சிறப்புடைத்தாய் மங்கலமரபிற்றும்; அவ்வாறே வேற்றுத்தளையும் அடியும் சீரும் விரவாமையால் எல்லாப் பாவினுள்ளும் வெண்பா சிறப்புடைத்தென்று முன்வைக்கப் பட்டதென்பது அறிவித் தற்கு எனக்கொள்க.

## வெண்பா

நாற்சீ ரடியால் நடைபெறுதலும், வேற்றுப்பாவினால் இருமையும், எல்லாப் பொருள்மேலும் சொல்லப்படுதலும் என்றிவற்றால் ஆசிரியத்தோடு ஒத்தலும், உயர்ந்த ஓசைத் தாகலும், உத்தமசாதியாகலும், வேற்றுத்தளையும் வேற் றடியும் வேற்றுப்பாவும் விரவாமையும் என்னும் அதிக குணமுடைமையும் நோக்கி வெண்பா ஆசிரியத்தின் முன் வைக்கப்பட்டது.

## ஆசிரியப்பா

அளவடியால் நடைபெறுதலும், தனது நடையால் தானினி திறுதலும், எல்லாப் பொருள்களையுந் தன்கண்ணே யடக்கலும், ஒருவாத பொருளிற்றுதலும் என்னும் ஒருபுடை

யால் வெண்பாவோடொததலும், அகவிப வோசைத்தாக லும், அரசர் குலத்தினதாகலும், வேற்றுத்தளையும் அடியும் விரவி வருதலும் என்னும் வேறுபாடுடைமையும் நோக்கி வெண்பாவின்பின் ஆசிரியப்பா வைக்கப்பட்டது.

### கலிப்பா

நேரடியால் நிலைபெறுதலும், அயலடியும் அயற்றளையும் விரவிவருதலும் என்றிவற்றால், ஆசிரியத்தோடு ஒத்தலும், அயற்பாவினுலிறுதலும், புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கண்மேற்புகாமையும், வணிக குலத்தினதாகலும், துள்ளலோசைத்தாகலும் நோக்கி ஆசிரியத்தின்பின் கலிப்பா வைக்கப்பட்டது.

### வஞ்சிப்பா

புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கள்மேற் புகாமையும், அயற்றளையும் அயலடியும் விரவி வருதலும், அயற்பாவின் இறுதலும், என்றிவற்றால் கலிப்பாவினேடு ஒத்தலும், நாற்சீரடியான் நடவாமையும், தாழ்ந்த குலத்தினதாகலும், தூங்கலோசைத்தாகலும், அகப்பொருள்கள் மேல் அருகியன்றி வாராமையும் நோக்கிக் கலிப்பாவின் பின் வஞ்சிப்பா வைக்கப்பட்டது. இது நிறுத்த முறைமை.

—— ——

# 3. ஒழிபியல்

## எழுத்துக்கு ஒழிபு

சீரும் தளையும் சிதையின் சிறிய இஉஅளபோ(டு)
ஆரும் அறிவர் அலகு பெருமை;ஐ கார(ம்)நைவேல்
ஓரும் குறிலியல்; ஒற்றள பாய்விடின் ஓரலகாம்
வாரும் வடமும் திகழும் முகில்முலை வாணுதலே. (௩௪)

பொழிப்புரை: கச்சும் மணிமாலையும் தாங்கிய முகிழ்த்த மார்பகங்களையும், ஒள்ளிய நெற்றியினையும் கொண்ட பெண்ணே! செய்யுளில் சீரும் தளையும் சிதையுமானுல் குற்றியலிகரம், குற்றியலுகரம், உயிரளபெடை ஆகியவை அலகுபெருது. (அவை இருப்பினும், இருப்பதாக மதிக்கப் பெரு.) செய்யுளில் சீரும் தளையும் சிதையுமானுல் ஐகாரக் குறுக்கும் குற்றெழுத்தாக மதிக்கப்பெறும். செய்யுளில் சீரும் தளையும் சிதையுமானுல் ஒற்றளபெடை ஓர் அலகுபெறும். (ஓர் அசையாக மதிக்கப்பெறும்) – என்னும் இச்செய்திகள் யாப்பிலக்கணம் உணர்ந்தோர் யாவரும் அறிந்ததே.

'சிறுநன்றி இன்றிவர்க்கியாம் செய்தக்கால் நாளைப்
பெருநன்றி பின்னும் பெரிதென்(று) — உறுநன்றி
தானவாய்ச் செய்வதும் தானமன் றென்பவே
வானவா முள்ளத் தவர்'

இவ்வெண்பாவுள் உள்ள 'இன்றிவர்க்கியாம்' என்ற சீர் கூவிளங்கனிச்சீர். வெண்பாவினுள் கனிச்சீர் வரலாகாது. இதன்கண் உள்ளே குற்றியலிகரத்தைஎண்ணு தொழியின் கூவிளங்காய்ச் சீராகும்.

'குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.'

இதனுள் 'தியாழினி' — கருவிளம். இச்சீரைக் கருவிளச்சீராகக் கொண்டால் 'குழலினி — தியாழினி' — இதனிடைத் தோன்றுவது நிரையொன்றுசிரியத்தளை. வெண்

பாவினுள் இத்தளை வரலாகாது. அதன் குற்றியலுகரமாகிய 'து' என்பதற்கு அலகுதரா தொழியின் அவ்விடத்து இயற் சீர் வெண்டளை நிலவும். குழலினது யாழினிது எனப்பிரித் துத் தளை பார்த்தல் மரபும் முறையுமன்று.

கொன்று கோடு நீடு குருதிபாயவும்
சென்று கோடு நீடு செழுமலை பொருவன
வென்று கோடு நீடு விறல்வேழும்
என்று மூடு நீடு பிடியுளபோலும்

அதனால்

இண்டிடை இரவிவண் நசைஇ வரின்
வண்டுண் கோதை உயிர்வா ழலளே.

இக்குறளடி வஞ்சிப்பாவுள் குற்றியலுகரங்களை உள் ளிட்டு நான்கசைச் சீர்கள் வந்துள்ளன. கொன், றுகோ, டுநீ, டு — கூ விள நறும்பூ. இதில் குற்றியலுகரங்களுக்கு அலகு தாராதுவிடினும் இலக்கணம் சிதையாது. குற்றியலுக ரங்களுக்கு அலகு தாரா தொழியின் தேமாங்காய்ச் சீராகும். இப்பாடலின் இரண்டு மூன்று நான்கடிகட்கும் இதுவே குறிப்பு.

இப்பாடலை கொன். று, கோ, டு, நீ, டு எனப் பிரித்து ஆறசைச்சீர் வந்த தென்பாரும் உளர். குற்றுகரம் பின்வரும் எழுத்துடன் இணையாதென்னும் இலக்கணம் இன்மையின் அது பொருந்தாது.

'பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத்தோற்றின னம்தோற்றிலவால்—நெல்லுக்கு
நூறோஒநூ றென்பாள் நுடங்கிடைக்கும் மென்முலைக்கும்
மாறோமால் அன்றளந்த மண்.'

இவ்வெண்பாவுள் 'நூறோஒநூ' — எனும் சீருள் வந்த அளபெடை பண்ட மாற்றளபெடை. நூறோஒநூ—தேமாங் கனி. வெண்பாவுள் கனிச்சீர் வரலாகாது. எனவே இவ் வுயிரளபெடைக்கு அலகுதாரா தொழிந்தால் தேமாங்காய்ச் சீராகும். தளையும் வெண்சீர் வெண்டளையாய் அமையும்.

வந்துநீ சேரின் உயிர்வாழும்; வாராக்கால்
முந்தியாய் பெய்த வளைகழலும் — முந்தியாம்
கோளானே கண்டனம் கோல்குறியாய் இன்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு.

இவ்வெண்பாவுள் சீரும் தளையும் சிதையாமையால் 'வந்துநீ' 'முந்தியாய்' 'முந்தியாம்' என்னும் சீர்களிலுள்ள குற்றியலுகர, குற்றியலிகரங்கள் அலகு பெற்றன.

அன்னையை யான் நோவ(து) அவமேல் அணியிழாய்
புன்னையையான் நோவல் புலந்து.

இதிலுள்ள ஐகாரக் குறுக்கங்கள் குற்றெழுத்தே போல அண்மை எழுத்துடன் கூடி அலகு பெறுகின்றன. சீரின் முதல், இடை, கடை ஆகிய மூவிடங்களிலும் ஐகாரக்குறுக்கம் இவ்வாறு வரும்.

'கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வாய் இலவம்பூ
மின்ன் னுழைமருங்கின் மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு.'

இவ்வெண்பாவுள் ஒற்றளபெடைகள் தனியொரு நேரசையாகின்றன. அவ்வாற்றான் இயற்சீர் வெண்டளைகளாகின்றன.

'எஃஃகு கிலங்கிய கையராய் இன்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு.'

இதன்கண் அளபெடுத்துள்ள ஆய்தங்கள் தனியொரு நேரசையாகின்றன. தளை, இயற்சீர் வெண்டளை.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'ஆரும் அறிவர்' என்று மிகுத்துச் சொல்லியவதனால் குற்றியலிகரமும், குற்றியலுகரமும் ஒற்றியல்பினவாய் நிற்கும்; உயிரளபெடைகள் நெட்டெழுத்தியல்பினவாய் நிற்கும் அலகிடும் இடத்தெனக் கொள்க.

இன்னும் 'ஆரும் அறிவர்' என்று மிகுதிச் சொல்லிய வதனால் அவை அலகுகாரியம் பெறும்போது குற்றியலிகர மும், குற்றியலுகரமும் குற்றெழுத்தின் பயத்தவாம்.

எதிரது மொழிதல் என்னும் இலக்கணத்தால் சீரும் தளையும் திருந்த நிற்புழிச் 'சிறிய இஉஅளபோடு ஆரும் அறிவர் அலகுபெறுதல்' என்பதாயிற்று.

கார்க்கடல், கார்ச்சேதம், கதிர்ச்செந்நெல், கடாய்க் கன்று என ஈரொற்றுடனிலையாய் நிற்பினும் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகுபெரு என்பதூஉம், ஒற்றளபேழினும் மற்றோரெழுத்திேனோடும் கூடி நிரையசை ஆகாதென்பதூஉம் பெறப்பட்டன.

## அசைக்கு ஒழிபு

விட்டிசைத் தல்லால் முதற்கண்
தனிக்குறில் நேரசைஎன்(று)
ஒட்டப் படா(து)அதற்(கு) 'உண்ணுன்'
உதாரணம்; ஓசைகுன்று
நெட்டள பாய்விடின் நேர்நேர்
நிரையொடு நேரசையாம்
இட்டத்தி னுல்குறில் சேரின்
இலக்கியம் 'ஏர்சிதைவே'. (௩௭)

பொழிப்புரை: விட்டிசைத்த வழியல்லாது மொழிமுதலில் நின்ற தனிக்குற்றெழுத்து நேரசையாகக் கருதப்படாது. விட்டிசைத்து மொழிமுதற்றுறில் நேரசை ஆயினமைக்கு 'உண்ணுன்' எனத்தொடங்கும் பாடல் இலக்கியமாகும். தனிநெட்டெழுத்து அளபெடுத்து வந்தால் நேர்நேர் என அலகுபிரிக்க வேண்டும். குற்றெழுத்தோடு இணைந்த நெட் டெழுத்து அளபெடுத்து வந்தால் நிரைநேர் என்று அலகு பிரிக்க வேண்டும்.

இது மகடூஉ முன்னிலை இல்லாத காரிகை.

விட்டிசைத்தல் எனினும், பக்கிசைத்தல் எனினும், பிரிந் திசைத்தல் எனினும் ஒக்கும்.

விட்டிசைத்தலாவது தன் அண்மை எழுத்தோடு அசை பிரிக்குங்காலும் உச்சரிக்குங்காலும் சேராது பிரிந்து ஒலித்தல்.

விட்டிசைத்தல் குறிப்பு, ஏவல், தற்சுட்டு, வினு, சுட்டு என்னும் ஐந்து பொருள்மேல் வரும்.

'உண்ணுன் ஒளிநிருன் ஓங்கு புகழ்செய்யான்
துன்னரும் கேளிர் துயர்களையான் — கொன்னே
வழங்கான் பொருள்காத்(து) இருப்பானேல் அஆ
இழந்தான்என் றெண்ணப் படும்.'

இப்பாடல் அஆ என்ற குறிப்புப் பொருள் விட்டிசை பெற்று, நேர்நேர் என அலகு பிரிக்கப்பட்டு முன்சீர்க்கிடையில் வெண்சீர் வெண்டளையாகவும், பின்சீர்க்கிடையில் இயற்சீர் வெண்டளை யாகவும் வந்தது.

'அ. உ. அறியா அறிவில் இடைமகனே
நொ. அலையல் நின்ஞட்டை நீ.'

இப்பாடலுள் அ. உ. என்ற விட்டிசை எழுத்துத் தன்னையே சுட்டியமையால் தற்சுட்டு. தளை, இயற்சீர் வெண்டளை. நொ, ஏவல். இது விட்டிசைத்துத் தனி நேரசையாகிறது. 'இடைமகனே' என்னும் காய்முன் நொ என்னும் நேர்வந்து வெண்சீர் வெண்டளையாகிறது.

'அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்லா ரிகல்?'

இப்பாடலுள் முன்னைய மூன்று விட்டிசைகளும் சுட்டு. எஎவனை என்ற விட்டிசை, வினு. விட்டிசைகள் தனிநேரசையாகிச் சீரும்தளையும் சிதையாமை காண்க.

'ஏஎர் சிதைய வழாஅல் எலாஅநின்
சேயரி சிந்தின கண்'

இப்பாடலுள் 'ஏஎர்' என்று அளபெடுத்து வந்த நெட்டெழுத்து நேர்நேர் என்றும், 'அழாஅல்' 'எலாஅ' என்ற குறிலை அடுத்து வந்த நெட்டெழுத்தின் அளபெடைகள் நிரைநேர் என்றும் அலகுபெறுகின்றன.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'ஒட்டப்படாது' என்று மிகுத்துச் சொல்லியவதனுல் மொழிக்கு மூன்றிடத்தும் விட்டிசைத்து வந்த குற்றெழுத்து நேரசையாம் என்பதூஉம், விட்டிசைப்பதுதான் குறிப்பு, ஏவல், தற்சுட்டு, வினு, சுட்டு என்னும் ஐந்தன் கண்ணும் என்பதூஉம், குற்றெழுத்து விட்டிசைத்து நின்றவிடத்து மற்ருெரெழுத்திேனுடும் கூடி நிரையசையாகாது என்பதூஉம் பெறப்பட்டன.

'ஓசைகுன்ரு' என்று மிகுத்துச் சொல்லியவதனுல் மூன்று மாத்திரையின் மிகஉச்சரிப்பினும், நேர்நேராக வைக்கப் படும் எனக்கொள்க.

'இட்டத்தினுல்' என்று மிகுத்துச் சொல்லியவதனுல் பின்னின்ற குறிலோடும் நெடிலோடும் கூடி அளபெடை நிரையசையாகாது எனக்கொள்க.

### சீருக்கும் தளைக்கும் ஒழிபு

மாஞ்சீர் கலியுள் புகா;கலிப்
பாவில் விளங்கனிவந்(து)
ஆம்சீர் அடையா; அகவ
லகத்தும்;அல் லாதவெல்லாம்
தாம்சீர் மயங்கும்; தளையும்அஃ
தே,வெள்ளைத் தன்மைகுன்றிப்
போம்சீர் கனிபுகின் புல்லா(து)
அயல்தளை பூங்கொடியே! (கூஅ)

பொழிப்புரை : பூங்கொடி போன்ற பெண்ணே! (தேமா புளிமா என்னும் இரண்டு) மாஞ்சீர்களும் கலிப்பாவில் வாரா. கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளும் (கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் இரண்டு) விளங்கனிச்சீர்களும்வாரா. மற்றைய அனைத்துச்சீர்களும் தளைகளும் வெண்பா ஒழிந்த எஞ்சிய பாக்களிலும், பாவினங்கள் அனைத்திலும் மயங்கப் பெறும். வெண்பாவின் தன்மையைக் குறைக்கும் வஞ்சி

யுரிச்சீர் நான்கும் வெண்பாவில் புகா. வெண்சீர், இயற்சீர் வெண்டளைகள் தவிர வேற்றுத்தளைகளும் வெண்பாவில் புகா.

இவற்றிற்கு இலக்கியங்கள் முன்னர்க் கூறப்பெற்றன.

## குணசாகரர் விளக்க உரையில் ஒரு பகுதி

'குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு வெண்மணன்மேல் நின்று—புலாலுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிறர்
உள்ளம்பு காப்ப துரை.'

இவ் வெண்பாவினுள், வஞ்சியுரிச்சீர் வந்தனவாலோ வெனின், திருவள்ளுவப்பயன், நாலடி நானூறு முதலாகிய கீழ்க்கணக்குள்ளும், முத்தொள்ளாயிரமுதலாகிய சான்றோர் செய்யுளுள்ளும் வஞ்சியுரிச்சீர் வந்திலாமையானும், வெண் பாவினுள் வஞ்சியுரிச்சீர் வருகவென்னும் ஒத்தில்லாமையா னும், வேற்றுத்தளை வெண்பாவினுள் வந்திலாமையானும் இத் தொடக்கத்தன குற்றமல்லது குணமாகா என்பது காக்கைபாடினியார் முதலாகிய தொல்லாசிரியர் துணிவு. அதுவே இந் நூலுடையார்க்கும் உடன்பாடு.

## அடிக்கு ஒழிபு

இயற்றளை வெள்ளடி வஞ்சியின்
பாதம் அகவலுள்ளான்
மயக்கப்ப டாவல்ல; வஞ்சி
மருங்கின்எஞ் சா, அகவல்
கயல்கண்நல் லாய்!கலிப் பாதமும்
நண்ணும்; கலியினுள்ளான்
முயக்கப் படும்முதற் கால்இரு
பாவும் முறைமையினே நுகூ

பொழிப்புரை: கயல்மீன் போன்ற கண்ணினைக் கொண்ட பெண்ணே! ஆசிரியப்பாவில், இயற்சீர் வெண் டளைகளால் வரும் வெண்பா அடியும் (இணைக்குறள் ஆசிரி யப்பாவில்) வஞ்சியடியும் மயங்கும். வஞ்சிப்பாவில் ஆசிரி

யப்பாவின் அடியும் கலிப்பாவின் அடியும் மயங்கும். கலிப்பாவில் அதற்கு முன்னதாகிய (வெண்பா, ஆசிரியப்பா ஆகிய) இருபாக்களின் அடிகளும் மயங்கும்.

அகவலுள்ளான், கலியினுள்ளான் என்பதில் உள்ள ஆன் அசைகள்.

அடிமயக்கம் சிறிதே கூறினாராயினும், வெண்பாவினுள் பிற அடிகள் மயங்கா; ஆசிரியத்துள் பிற அனைத்தடிகளும் மயங்கும். கலிப்பாவுள் வஞ்சியடி நீங்க எஞ்சிய அடிகள் மயங்கும்; வஞ்சியுள் அனைத்தடிகளும் மயங்கும் என உணரக்கிடக்கிறது. இவையும் ஆன்றோர் செய்த செய்யுட்களுக்கே ஆம். இவை யாவும் அருகிய வழக்கே.

ஆசிரியப்பாவுள் இயற்சீர் வெண்டளை அடி வந்தமைக்கு உதாரணம்:—

'எறும்பி யளையில் குறும்பல் சுனைய
உலைக்கல் லன்ன பாறை ஏறிக்
கொடுவில் லெயினர் பகழி மாய்க்கும்
கவலைத்(து) என்ப அவர்சென்ற ஆறே
அதுமற் றவலம் கொள்ளாது
நொதுமற் கழறுமிவ் வழுங்க லூரே.'

ஆசிரியப்பாவுள் வெண்சீர் இயற்சீர் வெண்டளைகளானாகிய வெண்பா அடி வந்தமைக்கு உதாரணம் :—

'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டென
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
ஏதில் மாக்களும் நோவர் தோழி
என்று நோவா ரில்லை
தண்கடல் சேர்ப்பன் உண்டவென் நலக்கே'

ஆசிரியப்பாவுள் கலியடி வந்தமைக்கு உதாரணம்:—

'குருவெண் தாளி கோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருவு பிடி திரிதரும் சாரல்
அருளா னாகுதல் ஆயிழை கொடிதே'

கலிப்பாவுள் வெள்ளடியும் ஆசிரிய அடியும் மயங்கிய மையைக் 'காமர்கடும்புனல்' என்ற (கலித்தொகை 39) மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவினுள் காண்க.

வஞ்சிப்பாவினுள் கலியடியும் ஆசிரிய அடியும் வெள்ளடியும் மயங்கி வந்தமைக்குப் பத்துப்பாட்டுள் பட்டினப்பாலையைக் காண்க. பட்டினப்பாலை வஞ்சிநெடும் பாட்டே.

## குணசாகரர் விளக்கஉரையில் ஒரு பகுதி

'மயக்கப்படும்' என்னுது 'மயக்கப்படா அல்ல' என இருகால் விலக்கிச் சொல்லியவதனுல், வெண்சீர் விரவிய இயற்றளை வெள்ளடியும், கலியடியும் ஆசிரியத்துள் அருகி வரப்பெறும் எனக் கொள்க.*

## மேலும் அடிக்கும் தொடைக்கும் ஒழிபு

அருகிக் கலியோ(டு) அகவல்
மருங்கின்ஐஞ் சீர்அடியும்
வருதற்(கு) உரித்(து)என்பர் வான்தமிழ்
நாவலர் மற்(று)ஒருசார்
கருதில் கடையே, கடையிணை
பின்,கடைக் கூழையும்என்(று)
இரணத் தொடைக்கும் மொழிவர்
இடைப்புணர்(வு) என்பதுமே சுo

பொழிப்புரை: கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் ஒரோவழி ஐஞ்சீரடியும் (நெடிலடியும்) வரும் என்று தமிழ்வல்ல சான்றோர் உரைப்பர். முரண்தொடை, கடைமுரண் கடையிணைமுரண் பின்முரண் கடைக்கூழைமுரண் இடைப்புணர்முரண் என்ற பகுப்புக்களுடன் வருதலும் உண்டெனக் கூறுவர்.

கலிப்பாவில் ஐஞ்சீரடி வந்தமைக்கு உதாரணம்:-

'அணிகிளர் சிறுபொறி அவிர்துத்தி
மாநாகத் தெருத்தேறித்
துணியிரும் பனிமுன்னீர் தொட்டுழந்து மலைந்தனையே!'

---

*இவற்றிற்கும் உதாரணங்கள் மேலேகாட்டப்பெற்றன.

ஆசிரியப்பாவில் ஐஞ்சீரடி வந்தமைக்கு உதாரணம் :-

உமணர்ச் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காட்டு
இன்னா வென்றிர் ஆயின்
இனியவோ பெரும தமியேற்கு மனையே'

'சிறியகட்பெறினே' என்னும் இணைக்குறள் ஆசிரியப் பாவினுள் வரும் குறளடிகளையும் சிந்தடிகளையும் இணைத்து ஐஞ்சீரடி வந்ததெனல் பொருந்தாது.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

இரணத்தொடை எனினும், பகைத்தொடை எனினும் முரண்தொடை எனினும் ஒக்கும்.

கடைமுரணாவது அடிதோறும் இறுதிச் சீர்க்கண் மறுதலைப்படத்தொடுப்பது. கடை இணை முரணாவது, கடை இரு சீர்க்கண் மறுதலைப்படத் தொடுப்பது. பின்முரணாவது இரண்டாம் சீர்க்கண்ணும் நான்காம் சீர்க்கண்ணும் மறுதலைப்படத்தொடுப்பது. கடைக்கூழை முரணாவது முதற் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மறுதலைப் படத் தொடுப்பது. இடைப்புணர் முரணாவது நடு இரு சீர்க் கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது.

வருமாறு:-

நேரிசையாசிரியப்பா

"கயன்மலைப் பன்ன கண்ணிணை கரிதே
தடமுலை திவளுந் தனிவடம் வெளிதே
நூலி னுண்ணிடை சிறிதே
ஆடமைத் தோளிக் கல்குலோ பெரிதே"

இஃது அடிதோறும் இறுதிச் சீர்க்கண் மறுதலைப்படத் தொடுத்தமையால் கடைமுரண்.

நேரிசையாசிரியப்பா

''மீன்தேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனுர் ஞாழல் விரிசினைக் குழுஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவுந் தவிரான்
தேரோ காணலங் காண்டும்
பீரேர் வண்ணமுஞ் சிறுநுதல் பெரிதே.''

இஃது அடிதோறுங் கடை இருசீர்க்கண்ணும் மறுதலைப் படத் தொடுத்தமையால், கடையிணை முரண்.

நேரிசையாசிரியப்பா

''சார லோங்கிய தடந்தாழ் தாழை
கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியம் இருந்தன மாக நின்றுதன்
நயனுடைப் பணிமொழி நன்குபல பயிற்றி
வீங்குதொடிப் பணைத்தோள் நெகிழத்
துறந்தோன் அல்லனெம் மேனியோ தீதே.''

இஃது அடிதோறுங் கடைச்சீரும், இரண்டாஞ்சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால் பின் முரண்.

நேரிசையாசிரியப்பா

''காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளும் அணங்குமால் எமக்கே.''

இது முதற்சீரொழிந்த மூன்றுசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால், கடைக்கூழைமுரண்.

நிலைமண்டில வாசிரியப்பா

''போதவிழ் குறிஞ்சி நெடுந்தண் மால்வரைக்
கோதையில் தாழ்ந்த வோங்குவெள் ளருவி
காந்தளஞ் செங்குலைப் பசுங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூ ரிழிதரு நலங்கவர்ந்
தின்னு வாயின இனியோர் மாட்டே.''

இஃது இடை இருசீரும் மறுதலைப்படத் தொடுத்தமை யால், இடைப்புணர் முரண்.

இவ்வாறு சொன்னர் கையனர் முதலாகிய ஆசிரியர் எனக் கொள்க.

இனி, 'இரணத் தொடைக்கும்' என்ற உம்மையால் ஒழிந்தமோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னுந் தொடை நான்கிற்கும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. அவை கூடி வழங்குமாறு:—

| | |
|---|---|
| கடைமோனை | கடையெதுகை |
| கடையிணைமோனை | கடையிணையெதுகை |
| பின்மோனை | பின்னெதுகை |
| கடைக்கூழைமோனை | கடைக்கூழையெதுகை |
| இடைப்புணர்மோனை— | இடைப்புணரெதுகை — |
| எனவும், | எனவும், |
| கடையியைபு | கடையளபெடை |
| கடையிணை இயைபு | கடையிணையளபெடை |
| பின்னியைபு | பின்னளபெடை |
| கடைக்கூழையியைபு | கடைக்கூழையளபெடை |
| இடைப்புணரியைபு — | இடைப்புணரளபெடை— |

எனவும்,

எனவுங் கண்டுகொள்க. இவற்றிற் கிலக்கியம் யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

## மேலும் சில தொடைகட்கு ஒழிபு

வருக்கம், நெடில், இன்ம் வந்தால்
எதுகையும் மோனையும்என்(று)
ஒருக்கப் பெயரான் உரைக்கப்
படும்; உயிர், ஆ(சு)இடைஇட்(டு)
இருக்கும் ஒருசார் இரண்டடி
மூன்றும் எழுத்து(ம்)ஒன்றி
நிரக்கும் எதுகை; என்றுலும்
சிறப்பில நேரிழையே! (சுக)

பொழிப்புரை: நேரிழையே! வர்க்க எழுத்தும், நெடிலெழுத்தும், இனஎழுத்தும் எதுகையும் மோனையுமாக வரும். அப்பொழுது அவை வருக்க எதுகை, நெடிலெதுகை, இன எதுகை எனவும், வருக்கமோனை நெடில்மோனை இன மோனை எனவும் ஒன்ருகச் சேர்ந்த பெயரிட்டு அழைக்கப் பெறும். உயிர் எதுகை, ஆசெதுகை, இடையிட்டெதுகை, இரண்டடி எதுகை, மூன்ரும் எழுத்தொன்றெதுகை எனவும் ஒருசில பகுப்புக்கள் உண்டென்ருலும் அவை சிறப்பற்றவை

வர்க்கம் - தன் சாதியின் கூட்டம். கவர்க்கம் என்ருல் க என்னும் சாதியின் வரிசை எழுத்துக்கள் எனப் பொருள் படுதல் காண்க.

இன எதுகையும், இனமோனையும் மும்மூன்று வகைப் படும்; வல்லின எதுகை, மெல்லின எதுகை, இடையின எதுகை எனவும், வல்லின மோனை; மெல்லின மோனை இடையினமோனை எனவும்.

வருக்க எதுகைக்கு உதாரணம்:-

‘அறத்தா(று) இதுவென வேண்டா; சிவிகை
பொறுத்தானே(டு) ஊர்ந்தா னிடை’

இது றகர வருக்க எதுகை.

வருக்கமோனைக்கு உதாரணம்:-

பகலே, பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்நெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத் திருத்தி
புனையி ரோதி செய்குறி நசைஇப்
பூந்தார் மார்ப புனத்துள் தோன்றிப்
பெருவரை யடுக்கத் தொருவே லேந்திப்
பேயும் அறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொங்குசினந் தணியாப் பூநுத லொருத்தல்

போகாது வழங்கு மாரிரு ணடுநாள்
பௌவத் தன்ன பாயிருள் நீந்தி
இப்பொழுது வருகுவை யாயின்
நற்ருர் மார்ப தீண்டலெங் கதுப்பே. ”

இது பகர வருக்க மோனே.

நெடில் எதுகைக்கு உதாரணம்:-

'ஆவா ... ... ... ... ஒரு சாரார்*

இதனுள் அடிதோறும் இரண்டாம் எழுத்துக்கள் அனைத்தும் நெட்டெழுத்துக்கள்.

நெடில் மோனேக்கு உதாரணம்:-

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை'

இதன் முதலெழுத்துக்கள் நெட்டெழுத்துக்கள்.

வல்லின எதுகைக்கு உதாரணம்:-

'தக்கார் தகவிலர் என்ப(து) அவரவர்
எச்சத்தால் காணப் படும்.'

மெல்லின ஏதுகைக்கு உதாரணம்:-

'அன்பீனும் ஆர்வ முடைமை; அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு'

இடையின எதுகைக்கு உதாரணம்:-

'எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்ரேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு'

வல்லின மோனேக்கு உதாரணம் :-

'கயலேர் உண்கண் கலுழ நாளுஞ்
சுடர்புரை திருநுதல் பசலே பாயத்
திருந்திழை அமைத்தோள் அரும்பட ருழப்பப்
போகல் வாழி யைய பூத்த
கொழுங்கொடி அணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம் பொழுதே.'

---

*இப்பாடலே இந்நூலுள் ருசஆம் பக்கத்தில் காண்க.

மெல்லின இடையின மோனைகட்கு உதாரணம் வந்துழிக்காண்க

உயிர்எதுகை என்பது, இரண்டாம் எழுத்துக்கள் அல்லது இரண்டாம் எழுத்துக்களின் மேலேறிய எழுத்துக்கள் உயிர்எழுத்துக்களாக அமைவது. நெடில் எதுகை இதனுள் அடங்கும்.

ஆசெதுகை என்பது, இரண்டாவதாய் வரவேண்டிய எதுகை எழுத்து ய், ர், ல், ழ் என்ற ஆசெழுத்துக்களில் ஒன்றன்பின் நிற்பது.

இடையிட்டெதுகை என்பது ஒன்று விட்டு ஒருஅடியில் எதுகை வருவது.

இரண்டடி எதுகை என்பது இரண்டிரண்டடிகளுக்கு ஓரெதுகை வருவது. இருவிகற்பம் என முன்னர்க் கூறியதற்கும் இதற்கும் வேறுபாடு உண்டு. நான்கடிப் பாடலொன்று இருவிகற்பத்தான் வந்ததெனில், மூன்றடிக்கு ஒரு எதுகையும், ஓரடிக்கு மற்றொன்றுமாக வரலாம். இஃது அன்னதன்று மோனையுள்ளும் இரண் டிரண்டடிகளுக்கு ஒன்றுய்வரின் இரண்டடிமோனை எனப்படும்,

மூன்றும் எழுத்தொன்றெதுகை என்பது அடிதோறும் மூன்றும் எழுத்துக்கள் ஒன்றுய் வரத்தொடுப்பத. இதற்கும் முதலிரண்டெழுத்துக்கள் அளவால் ஒத்து வரவேண்டும்.

உயிரெதுகைக்கு உதாரணம்:—

‘துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
அணிகிளர் தாரோய் அருஞ்சுர நீந்தி
வடியமை யெஃகம் வலன்வயின் ஏந்தித்
தனியே வருதி நீயெனின்
மையிருங் கூந்த லுய்தலோ அரிதே.’

யகர ஒற்று இடைவந்த ஆசெதுகைக்கு உதாரணம்:-

*“காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால் திசைபோய துண்டே.”

ரகர ஒற்று இடைவந்த ஆசைதுகைக்கு உதாரணம்:-

‘மாக்கொடி மாலையும் மௌவற் பந்தரும்
கார்க்கொடி முல்லையும் கலந்து மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும் பொன்னின ஞாழலும்
தூக்கடி கமழ்ந்துதான் துறக்கம் ஒத்ததே.’

லகர ஒற்று இடைவந்த ஆசெதுகைக்கு உதாரணம்:-

‘ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம் பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி யாபோல்
உருவுபலகொள லீங்கு*.’

ழகர ஒற்று இடை வந்த ஆசெதுகைக்கு உதாரணம்:-

‘அந்தரத் துள்ளே யகங்கை புறங்கையாம்
மந்தரமே போலும் மனைவாழ்க்கை—மந்தரத்து
வாழ்கின்றே மென்று மகிழன்மின் வாழ்நாளும்
போகின்ற பூளையே போன்று.’

இடையிட்டெதுகைக்கு உதாரணம்:-

‘தோடா ரெல்வளை நெகிழ நாளும்
நெய்தலுண்கண் பைதல் கலுழ
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைப்பயப் பெருகின
நீடா ரிவரென நீமனங் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழி
வாடாப் பௌவ அறன்முகந் தெழிலி
பருவம் பொய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.’

---

* பால்போல் என்பதைத் தனிச்சொல்லாகக் கொள்ளலாகாது.

இரண்டடி எதுகைக்கு உதாரணம்:-

'செல்வப்போர் ......... ஒளித்ததே'†

இரண்டடிமோனைக்கு உதாரணம்:-

'ஆகம் கண்டக ராலற்ற ஆடவர்
ஆகம் கண்டகத் தாலற்ற அன்பினர்
பாகம் கொண்டு பயோதரம் சேர்த்தினர்
பாகம் கொண்டு பயோதரம் நண்ணினர்'

மூன்றும் எழுத்து ஒன்று எதுகைக்கு உதாரணம்:-

'பவழமும் பொன்னும் குவைஇய முத்தின்
திகழரும் மீன்றனபுன் னை'

ஆசிடையிட்டு வந்த மூன்றும் எழுத்தொன்று எதுகைக்கு உதாரணம்:-

'பொய்ம்மையும் வாய்மை இடத்த; புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்'

இதனுள் யகர ஒற்று ஆசாய் வந்தது.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'ஒருக்கப் பெயரான்' என்று சிறப்பித்தவதனுல் ஒருசார் ஆசிரியர் தலையாகு எதுகை, இடையாகு எதுகை, கடையாகு எதுகை என்றும், தலையாகுமோனை, இடையாகு மோனை, கடையாகுமோனை என்றும் வேண்டுவர் எனக் கொள்க.¶

---

† இச்செய்யுளை இந்நூலின் கஅ ஆம் பக்கத்தில்காண்க.

¶ அடிதோறும் முதற்சீரின் முதலெழுத்து அளவான் ஒத்துவர எஞ்சிய எழுத்துக்கள் ஒன்றுய் வருவது தலையாகு எதுகை; உறுப்பியலுள் கூறப்பட்டபடி வருவது இடையாகு எதுகை; ஒழிபு எதுகைகள் கடையாகு எதுகை. அடிதோறும் முதற்சீர் முழுதும் ஒன்றுய் வருவது தலையாகுமோனை. உறுப்பியலுள் கூறப்பட்டபடி வருவது இடையாகுமோனை. ஒழிபு மோனைகள் கடையாகுமோனை.

'சிலை விலங்கு ......... போழ்து' *

என்பது தலையாகு எதுகை.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்பது இடையாகு எதுகை.

'தக்கார் ......... காணப்படும்' §

என்பது கடையாகு எதுகை.

'பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

என்பது தலையாகுமோனை.

'மாவும் புள்ளும் ......... அன்றே' $

என்பது இடையாகுமோனை.

'பகலே ... ... கதுப்பே' ‡

என்பது கடையாகுமோனை.

இன்னும் "ஒருக்கப் பெயரான் உரைக்கப்படும்" என்று சிறப்பித்தவதனாற் பாவினங்கள் எல்லாத் தொடையானும் வரும் என்றாராயினும், பெரும்பான்மையுந் தலையாகு மோனையிற் றிரிந்தும், தலையாகு எதுகையிற் றிரிந்தும் வாராவெனவும், செந்தொடை யொழித் தெல்லாத் தொடைக்கும் இனவெழுத்து வரத்தொடுப்பதூஉம், வழி யெதுகை வரத்தொடுப்பதூஉம் வழிமுரண் வரத்தொடுப் பதூஉஞ் சிறப்புடைத்தெனவுங் கொள்க.

இனவெழுத்துப் பெற்று, மோனை முதலாகிய தொடையும், தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுப்பது 'மருட்செந்தொடை' எனக் கொள்க. இனவெழுத்தாமாறு தானமொத்த குறிலும், நெடிலுந் தம்முள் இனமாம்.

---

* இச்செய்யுளை கஎ ஆம் பக்கத்தில் காண்க.

§ இச்செய்யுளை ௧௦௪ ஆம் பக்கத்தில் காண்க.

$ இச்செய்யுளை உஅ ஆம் பக்கத்தில் காண்க.

‡ இச்செய்யுளை ௧௦௫ ஆம் பக்கத்தில் காண்க.

அவை,

அகர ஆகார ஐகார ஔகாரங்கள் தம்முள் இனமாம்
இகர ஈகார எகார ஏகாரங்கள் தம்முள் இனமாம்
உகர ஊகார ஒகர ஓகாரங்கள் தம்முள் இனமாம்.

இவை ஏறிய உயிர்மெய்க்கும் இவ்வாறே கொள்க.

ஒற்றினுள்,

சகர தகரங்கள் தம்முள் இனமாம்.

ஞகர நகரங்கள் தம்முள் இனமாம்.

மகர வகரங்கள் தம்முள் இனமாம்.

இவற்றை 'அனு' என்று வழங்குவாருமுளர்.

அமிழ்தினு மாற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

இது இனவெழுத்துப் பெற்று மோனை முதலாகிய தொடையும், தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுத்தமையான் மருட்செந்தொடை.

இனி, வழியெதுகை வருமாறு:

மண்டலம் பண்டுண்டதிண்டேர்வரகுணன் தொண்டியின் வாய்க்
கண்டலந் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகர
குண்டலம் கெண்டை இரண்டொடு தொண்டையுங் கொண்டொர்திங்கள்
மண்டலம் வண்டலம் பக்கொண்டல் தாழ வருகின்றதே.

'அனுப்பி ராசம்' என்னும் வடமொழியை, 'வழியெதுகை' என்பது தமிழ் வழக்கு.

இனி, வழி முரண் வருமாறு:

செய்யவாய்ப் பசும்பொ னேலைச் சீறடிப் பரவை யல்குல்
ஐய நுண் மருங்குல் நோவ வடிக்கொண்ட குவவுக் கொங்கை
வெய்யவாய்த் தண்ணென் நீலம் விரிந்தென விலங்கி நீண்ட
மையவா மழைக்கட் கூந்தன் மகளிரை வருக வென்றான்.

'நிரக்கு மெதுகை' என்று சிறப்பித்தவதனுல், விட்டிசை வல்லொற்றெதுகை என்றும், விட்டிசை மோனை என்றும் வேண்டுவாரும் உளர் எனக் கொள்க.

வருமாறு :

பற்றிப் பலகாலும் பான்மறி உண்ணுமை
நொ அலையல் நின்னுட்டை நீ.

இது வல்லொற் றடுத்தாற்போல, விட்டிசைத்துக் குற்றெழுத்திஞேடு, புணர்ந்தமையான், விட்டிசை வல்லோற்றெதுகை.

அ அவனும் இ இவனும் உ உவனுங் கூடியக்கால்
எ எவனை வெல்லா ரிகல்.

இது முதலெழுத்து இரண்டடிக்கண்ணும் விட்டிசைத்து வந்தமையல், விட்டிசைமோனை, இவையெல்லாஞ் சிறப்பில வெனக் கொள்க.

## தரவு தாழிசைகட்கு அடிவரையறை

சுருங்கிற்று முன்றடி ஏனைத்
 தர(வு);இரு மூன்றடியே
தரங்கக்கும், வண்ணகக் கும்,தர
 வாவது; தாழிசைப்பா
சுருங்கிற்(று) இரண்டடி, ஒக்கம்
 இரட்டி; சுரும்(பு)இமிரும்
தரங்கக் குழலாய்! சுருங்கும்
 தரவினில் தாழிசையே. (சூஉ)

பொழிப்புரை: வண்டுகள் மொய்க்கும், அலை போன்ற கூந்தலை உடைய பெண்ணே! அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும் ஆறடித் தரவு பெற்றுவரும்; மிகுதல் குறைதல் இல்லை! ஏனைய கலிப்பாக்களின் தரவு மூன்றடிச் சிற்றெல்லை பெற்றுவரும். (தரவு கொச்சகக் கலிப்பாவிற்குத் தரவு நான்கடிச் சிறறெல்லை) தாழிசைப்பாக்களின் அடிச்சிற்றெல்லை இரண்டு, பேரெல்லை

நான்கு. (இடை மூன்றடித் தாழிசையும் வரும்) கலிப் பாக்களில் தரவடிகளின் எண்ணிக்கையைக் காட்டிலும் தாழிசை அடிகளின் எண்ணிக்கை குறைந்தே வரும்.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவுக்கு இவ்வரையறை கள் முழுவதுமாகப் பொருந்தாது.

கூனும், நூற்புறநடையும்

பொருளோ(டு) அடிமுதல் நிற்பது
கூன்;அது வே,பொருந்தி
இருள்சேர் விலா,வஞ்சி ஈற்றினும்
நிற்கும்; இனி,ஒழிந்த
மருள்தீர் விகாரம், வகையுளி,
வாழ்த்து, வசை,வனப்புப்,
பொருள்கோள், குறிப்பிசை, ஒப்பும்
குறிக்கொள் பொலங்கொடியே! (சுரு)

பொழிப்புரை: பொற்கொடி போன்ற பெண்ணே! அடியின் தொடக்கத்தில் கூன் வரும். அஃது அவ்வடியின் பொருளை முற்றிலும் தழுவி வரும். (பாவின் பொருளை முற்றிலுமாகத் தழுவி வருதலும் உண்டு) அக்கூன் குற்றம் சேராத வஞ்சிப்பாவின் இறுதியிலும் வரும். இனி, இந்நூலுள் விளக்கப்படாத மயக்கம் தீர்ந்த விகாரம், வகையுளி, வாழ்த்து, வசை, வனப்பு, பொருள், பொருள்கோள், குறிப்பிசை, ஒப்பு ஆகிய எட்டன் இலக்கணத்தையும், பிற நூல்களானுன் ஆசிரியன் வாயிலாகவும் அறிந்துகொள்க.

முதன் மூன்று பாக்களிலும் கூன், அடி முதலில் வரும். வஞ்சிப்பாவில் அடியின் முதல் இடை கடை ஆகிய மூவிடங் களிலும் வரும். வஞ்சியின் இடையிலும் வரும் என்பது குணசாகரர் கருத்து.

கூன் என்பது ஒருவகைப் பாத்திரத்தின் மூக்கு. அம் மூக்கால் அப்பாத்திரத்துட் பொருள் வெளித்தோன்றல் போல கூன் சொல்லின் வழியாக, அச்சொல்லமைந்த அடியின் அல்லது பாடலின் பொருள் வெளிப்பட்டு நிறைவு பெறும்.

அசையும் சீரும் கூனாக வரும். வஞ்சிப்பாவில் சீர் கூனாய் வரின் உகர இறுதியாகிய நேரீற்றியற்சீரே வரும்,

யாப்பருங்கலமும் அதன் விருத்தியுரையும் கூனையும் தனிச் சொல்லையும் ஒன்றெனக்கொள்கின்றன. குணசாகரரும் அக்கருத்தே கொண்டவராதலின் முன்னர்க் கலிப்பா இலக்கணம் கூறும் முதற்காரிகை உரையுள் 'தனிச்சொல் எனினும், விட்டிசை எனினும், கூன் எனினும், தனிநிலை எனினும் ஒக்கும்' என எழுதிப் போந்தார். இக்காரிகை உரையிலும் தம் கருத்துக்கு ஆதரவாக உள்ள யாப்பருங்கல நூற்பாவைக் காட்டிக் 'கூனைத் தனிச்சொல் என வழங்குவாரும் உளர்' எனக் குறிக்கிருர். கூனும் தனிச்சொல்லும் பல வேறுபாடுகள் கொண்டவை.

## வேறுபாடுகள்

| கூன் | தனிச்சொல் |
|---|---|
| 1. பாடலின் உறுப்பன்று. | 1. பாடலின் உறுப்பாய் வருவது. |
| 2. வஞ்சிப்பா நீங்லாக எஞ்சிய பாக்களின் அடியின் முதலில் வருவது. | 2. எல்லாப் பாடல்களின் இடையிலும், இரு பாக்களின் இணைப்பிடத்திலும் வருவது. |
| 3. (வஞ்சி நீங்க) தனக்குப் பின்னே உள்ள பொருளை மட்டும இணைத்துக் கொள்வது. | 3. தனக்கு முன்னும் பின்னும் உள்ள பொருள் கட்கு இணைப்புப் பாலம் போல்வது. |
| 4. ஓரசையும் கூனாய் வரும். | 4. ஓரசை தனிச் சொல்லாகாது. |
| 5. அடிமுழுதும் கூனாய் வருதலும் உண்டு. | 5. இஃது அங்ஙனம் வாராது. |

வெண்பாவின் அடிமுதலில் கூன்வந்தமைக்கு உதாரணம்:—

உதுக்காண்; சுரந்தானா வண்மைச் சுவணமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழைப் பாடி—இரந்தார்மாட்
டின்மை யகல்வது போல இருணீங்க
மின்னும் அளிதேர் மழை,

ஆசிரிப்பாவின் அடிமுதலில் கூன் வந்தமைக்கு உதாரணம்:—

அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை ஞெகிழ நாளும்
பாடமை சேக்கையுட் படர்கூர்ந் திசினே
அன்னள் அளியள் என்னுது மாமழை
இன் னும் பெய்யு முழங்கி
மின்னும் தோழியென் இன்னுயிர் குறித்தே.

கலிப்பாவின் அடி முதலில் கூன் வந்தமைங்கு உதாரணம் :-

உலகினுள்,
பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிறழினும்
இருந்தகைய விறுவரைமேல் எரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார் சிறு தகைமை சிறப்பெனினும் பிறழ்வின்றி
உறுதகைமை யுலகினுக்கோர் ஒப்பாகித் தோன்றுதே.

வஞ்சிப்பாவின் அடிமுதலில் கூன் வந்தமைக்கு உதாரணம் :—

'உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி யொழுகு மென்ப
அதனுல்,
நற்றிற நாடுதல் நன்மை
பற்றற யாவையும் பரிவறத் துறந்தே.

வஞ்சிப்பாவின் அடிஇறுதியில் கூன் வந்தமைக்கு உதாரணம்:—

'மாவழுங்கலின் மயக்குற்றன – வழி'

வஞ்சிப்பாவின் இறுதியில் உகர இறுதியாகிய நேரீற்றியற்சீர் கூனுய்வந்தமைக்கு உதாரணம்:—

'தேரோடத் துகள்கெழுமின – தெருவு'

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'ஈற்றிலும்' என்ற உம்மையால் வஞ்சிப்பாவின் அடி நடுவினும் கூன்வரப்பெறும் எனக்கொள்க.

உ-ம். 'கலங்கழாலில் – துறை - கலக்குற்றன'.

'இருள்சேர் விலாவஞ்சி' என்று சிறப்பித்தவதனுல் வஞ்சி யடியின் நடுவும், இறுதியும் அசை கூனய் வருவது சிறப் புடைத்து ; சீர் கூனய்வரினும் உகர இறுதியாகிய நேரீற்று இயற்சீராயல்லது வாரா எனக்கொள்க. அசைச்சீர் எல்லாப் பாவினுள்ளும் அருகியல்லது கூனய் வாராது எனக்கொள்க. எனவே வெண்பா, ஆசிரியம், கலி என்னும் இவற்றின் இடையும், இறுதியுங் கூன்வரப்பெருது எனக்கொள்க.

கொச்சகக் கலியுள் ஓரடி முழுதும் கூனய் வரப்பெறும். அவை சிறப்பில எனக்கொள்க.

'காமர் கடும்புனல்' என்னும் கொச்சகக் கலியுள், 'சிறு குடியீரே சிறுகுடியீரே' என ஓரடியால் கூன் வந்தவாறு கண்டு கொள்க.

ஃ ஃ ஃ ஃ ஃ

## அமுதசாகரரால் விளக்கிக் கூறப்படாதன

**விகாரம்:** வலித்தல், மெலித்தல், விரித்தல், தொகுத் தல், நீட்டல், குறுக்கல் என ஆறு. இவற்றின் விரிவு தொல் காப்பியம், நன்னூல் முதலிய, எழுத்திலக்கணம் விதந்த நூல்களுட் காண்க.

**வகையுளி:** பிரிவு உள்ளது என்பது இச்சொற்குப் பொருள். செய்யுட்கண் ஒரு சொல்லைப் பொருளுக்காக அல்லாமல் ஓசைக்காகப் பிரிப்பது வகையுளி.

'கடியார்பூங் கோதை கடாயினுன் திண்தேர்
சிறியார்தம் சிற்றில் சிதைத்து'

என்னும் இக்குறள் வெண்பாவினுள் பூங்கோதை என்னு மொரு சொல்லைக் 'கடியார்பூங்' 'கோதை' என வகையுளி செய்தமையால் தளைசிதையாமல் வந்தது.

வாழ்த்து: இது மெய்வாழ்த்து இருபுற வாழ்த்து என இருவகைப்படும். மெய்வாழ்த்தாவது வெளிப்படையாக வாழ்த்துப் பொருளை அமைப்பது. (தண்டி வாழ்த்தணி காண்க). இருபுற வாழ்த்தாவது ஒருபுறம் வசையாகவும் மற்றொருபுறம் வாழ்த்தாகவும் அமைப்பது, இது அணி யியலுள் பழிப்பது போலப் புகழ்புலப்படுத்தலுள் அடங்கும். இருபுறம் என்பதற்கு இரண்டாவது பக்கம் எனப்பொருள் கொள்வதே மயங்காவுரையாகும்.

வசை: இதுவும் மெய்வசை இருபுறவசை என இருவகைப் படும். மெய்வசையாவது வெளிப்படையாக வாழ்த்துப் பொருளை அமைப்பது இருபுறவசையாவது ஒருபுறம் வாழ்த் தாகவும் மற்றொருபுறம் வசையாகவும் அமைப்பது இது அணியியலுள் புகழ்வது போலப் பழித்திறம் புனைதலுள் அடங் கும். ஈண்டும் இருபுறம் என்பதற்கு இரண்டாவது பக்கம் என்றே பொருள் கொள்க. மெய்வசைக்குக் காளமேகம் கவிகளுள் வசைக்கவிகளைக் காண்க. எஞ்சியவற்றிற்கு அணிநூல்களுள் உதாரணங்கள் காண்க.

வனப்பு: பலவுறுப்புகளையும் இயக்கும்போது ஏற்படும் செய்யுட் பொலிவு. அது அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என எட்டாம். இவை தொடர்நிலைச் செய்யுட்கே உரியன.

சின்மென் மொழியால் யாக்கப்படுவது அம்மை; திரி சொற்களான் யாப்பது அழகு; உரையிடையிட்ட பாட்டு தொன்மை; இழுமென் மொழியால் விழுமியது கூறுவதும், பரந்த மொழியால், நெடுந் தொடர்களான் யாப்பதும் தோல்; இப்பொழுது உள்ளாரைப் புதுமையாகப் பாடுவது விருந்து; ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள், என்னும் பதினொரு எழுத்துக்களுள் ஒன்றை ஈற்றில் பெற்று வருவது இயைபு; இயற்சொற்களால் பாடப்படுவது புலன்; எழுத்தெண்ணிப் பாடும் அடிகளில் அமையும் வனப்பு இழைபு. இவற்றின் விரிவும் உதாரணங்களும் தொல்காப்பியத்துட் காண்க.

பொருள்: அகம், புறம். இவற்றின் விரிவும் தொல் காப்பியம் முதலிய நூல்களுட் காண்க.

பொருள்கோள்: செய்யுளில் உள்ள சொற்களை முறை யறிந்து இணைத்துப் பொருள்கொள்ளும் வகைகள். அவை நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று, பூட்டுவில், யாற்றுநீர், தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டு கூட்டு என ஒன்பது வகைப்படும். அவற்றுட் சுண்ணம் நீங்க எஞ்சி யவை நன்னூலுட் கூறப்பெற்றவை. அவற்றின் விரிவு ஆண்டுக்காண்க.

சுண்ணம்: இடிக்கப்பட்டதூள். தூள்பரந்து கிடப்பது போலப் பரந்து கிடக்கும் சொற்களைப் பொருளுக்கேற்பக் கூட்டுவது. இப்பொருள்கோள் அளவடியிலேயே வரும்.

உதாரணம் :—

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

இதனுள் 'சுரை மிதப்ப; அம்மி ஆழ' என்றும், யானைக்கு நிலை; முயற்கு நீத்து' என்றும் பொருள்கொள்ள அமைந்தமையின் சுண்ணமொழி மாற்றாயிற்று.

குறிப்பிசை: ஒப்பாகித் தோன்றும் ஓசை. முற்குதல், சீழ்க்கை, இயற்கை இசை நிறைகள் (அனுகரணம்) போன்ற வற்றின் ஓசைகளைச் செய்யுளகத்து அமைக்குங்கால் இலக் கணச்சிதைவு ஏற்படலாகாது.

'மன்றலம் கொன்றை மலர்மிலைந்(து) உஃகுவஃ(கு)
என்று திரியும் இடைமகனே — சென்று
மறியாட்டை உண்ணுமை வன்கையால் வல்லே
அறியாயோ அண்ணுக்கு மாறு'

என்ற, இடைக்காடர் ஊசிமுறிப் பாடலுள் 'உஃ' என்பதனை நேர் என்றும், 'வஃ' என் பதனை நேர் என்றும் கொண்டு இலக்கணம் சிதையாமை காண்க. இவ்வாறே ஏனைய ஓசை கட்கும் அமைக்கவேண்டும்.

ஒப்பு : பண்பொத்தல் ஒப்பு. ஒரு பாடலின் இலக்கணத்தும் இயையாததையும் ஏறக்குறைய ஒத்ததொரு பாடல் வகையுள் அடக்குவது.

'மைப்படியும் கண்ணுளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லால்
ஒப்புடைய னல்லன்ஒ ருர னல்லன்.
ஒருவ னல்லன்ஓ ருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணுகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் கட்டொ ணுதே'

என்னும் அப்பர் திருத்தாண்டகத்துள், ஈரிடங்களில் கட்டளை பொருந்தாதாயினும் ஒப்பு நோக்கி எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்துள் அடக்குதல் வேண்டும்.

'கோழியும் கூவின குக்கில் குரல்காட்டும்
தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினே
ஆழிசூழ் வையத்தெம் அண்ண லடியேத்திக்
கூழை நனையக் குடைந்தும் குளிர்புனல்
ஊழியும் மன்னுவாம் என்றேலோ ரெம்பாவாய்.'

எனும் பாடல் கலிவிருத்த இலக்கணம் பெற்றதாயினும் ஓரடி அதிகம் பெற்றுள்ளது. இதனையும் ஒப்பு என்னும் இவ்விலக்கணத்தால் கலிவிருத்தத்துள் அடக்குதல் வேண்டும். இவ்வண்ணம் வருவன எல்லாம் கொள்க.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'பொருள்கோள்' என்பது உம்மைத்தொகை. பொருளும் பொருள்கோளும் என (விரியும்).

'அருளல்ல தியாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்'

இதனுள் அருளும் அருளல்லதும் எனற்பாலது 'அருளல்லது' *என உம்மை தொக்கதாகக்† கொள்க.

---

*மணக்கடவர் அருளல்லது என ஒரு சொல்லாகவேகொள்வர்
† உம்மை தொக்கதாக—உம்மை தொக்கதைப்போல

'ஒப்பும்' என்ற உம்மையால் வண்ணமும், புனைந்துரையும், அடியின்றி நடப்பனவும் ஆமாறுணர்ந்து கொள்க.

அவற்றுள், வண்ணம் நூறு திறத்தனவாம். அவை சொல்லுமாறு :-

தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என்னும் இவ்வைந்தினையும் முதல் வைத்து, அகவல் வண்ணம், ஒழுகிசை வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம் என்னும் இந்நான்கினையும் இடை வைத்து, குறில் வண்ணம், நெடில் வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இடையிசை வண்ணம் என்னும் இவ்வைந்தினையும் கடைவைத்துக்கூட்டி உறழ நூறு வண்ணமும் பிறக்கும்.

புனைந்துரை : இரண்டு வகைப்படும்; பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும் சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதலும் என‡. வருமாறு :-

'அடையார் பூங்கோதைக் கல்குலுந் தோன்றும்
புடையார் வனமுலையுந் தோன்றும்—இடையாதுங்
கண்டுகொள் ளா தாயினும் காரிகை நீர்மையாட்
குண்டாக வேண்டு நுசுப்பு.'

இது பெரியதனைச் சுருக்கிற்று.

'அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோர்
உசாப்போல வுண்டே மருங்குல்—உசாவினைப்
பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகினவே
கோதைக்கொம் பன்னாள் குயம்'

இது சிறியதனைப் பெருக்கிற்று.

அடியின்றி நடப்பன: பாட்டுரையும், நூலும், மந்திரமும், பிசியும் (விடுகதையும்), முதுசொல்லும் (பழமொழியும்), அங்கதமும் (வசையும்), வாழ்த்தும் என்னுமிவை. இவை ஓரடியானும் பலவடியானும் வரப்பெறும்.

---

‡ இல்லதனை உள்ளதாக்கிச் சொல்லுதலும், உள்ளதனை இலதாக்கிச் சொல்லுதலும் புனைந்துரையே.

## தொகுப்பு

எழுத்துப் பதின்மூன்(று); இரண்(டு)அசை;
சீர்முப்ப(து) ஏழ்தளை;ஐந்(து)
இழுக்கில் அடி;தொடை நாற்பதின்
மூன்(று);ஐந்து பா;இனம்மூன்(று);
ஒழுக்கிய வண்ணங்கள் நூ(று);ஒன்ப(து)
ஒண்பொருள் கோள்;இருமு
வழுக்கில் விகாரம்; வனம்(பு)எட்(டு);
யாப்புள் வகுத்தனவே. (சச)

இது மகடூஉமுன்னிலை இல்லாத காரிகை.

இந்நூலுள் ஆசிரியர் விளக்கிக் கூறியவையும், ஆசிரியர் உய்த்துணரவைக்க-உரையில் கூறப் பெற்றவையும் இக்காரிகையுட் கூறப்பெற்றன.

## குணசாகரர் விளக்கவுரையில் சில பகுதிகள்

'ஐந்து இழுக்கில் அடி' என்று சிறப்பித்தவதனால், திணை வழுவும், பால்வழுவும், மரபுவழுவும், வினவழுவும், விடை வழுவும், காலவழுவும்; இடவழுவும் என்று சொல்லப்பட்ட ஏழு வழுவும் படாமற் புணர்க்கப்படும் எனக்கொள்க.

'வழுக்கில் விகாரம்' என்று சிறப்பித்தவதனால்-எழுத்துக் குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற்றம், ஆநந்தக்குற்றம் என்னும் ஆறு குற்றமும் படாமற் புணர்க்கப்படுஞ் செய்யுட்கள் எனக்கொள்க.

அவற்றுள், எழுத்துக்குற்றம் முதலிய ஐந்தும் அவ்வவ் விலக்கண நூல்களால் அறிந்து கொள்க.

ஆநந்தக் குற்றமாவன .– எழுத்து முதலியன திரிதல். அவற்றுள், எழுத்தாநந்தம் வருமாறு :—

'ஆழி இழைப்பப் பகல்போம் இரவெல்லாந்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னுஞ்
செறுமாலை சென்றடைந்த போது.'

இதனுள், 'திரையவோஒ' என்று இயற்பெயரைச் சார்ந்து அளபெழுந்தமையால், எழுத்தாநந்தம்.

சொல்லானந்தம் வருமாறு :—

"என்னிற் பொலிந்த திவள்முக மென்றெண்ணித்
தன்னிற் குறைபடுப்பான் தண்மதியம்—மின்னி
விரிந்திலங்கு வெண்குடைச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலி னெழும்."

இதனுள், தலைமகன்மேல் 'எரிந்து' என்னுஞ்சொற் புணர்த்தமையால், சொல்லானந்தம்.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

"இந்திரனே போலும் இளஞ்சாத்தன்; சாத்தற்கு
மந்தரமே போன்றிலங்கு மல்லாகம்—மந்தரத்தில்
தாழருவி போன்றுளது தார்மாலை அம்மாலை
ஏழுலகு நாறும் இணர்."

இதனுள், சாத்தன் என்னுங் கீழ்மகனை அரசரை உவமித்தாற்போல உவமித்தமையால், இறப்ப உயர்ந்த ஆநந்த உவமை.

"வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழாம்
எள்ளி இரிந்தாற்போல் எவ்வழியும்—வள்ளற்கு
மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரு மேலார் விரைந்து."

இதனுட், புலியினோடு உவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு நாயை உவமித்தமையால், இறப்ப இழிந்த ஆநந்த உவமை.

அலங்காரக் குற்றமாவது :—

"வெண்திங்கள் போன்றிலங்கும் வெண்சங்கு; சங்கனைய
வண்டிலங்கு தாழை வளர்தோடு—விண்டெங்குங்
கள்ளாவி நாறுங் கருங்கழிசூழ் கானகத்தெம்
உள்ளாவி வாட்டு முரு."

இனி எல்லாக் குற்றமுந் தீர்ந்த செய்யுள் வருமாறு :—

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த செஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றா லுலகே."

முற்றிற்று

---

# உதாரணச் செய்யுட்களின் முதற்குறிப்பு

## அகர வரிசை

[எண் – பக்க எண்]

---